# சக்தி

## மாத வெளியீடு

9-46

*

சாரத் திரள்



*


விய ஆவணி

மலர் 13 இதழ் 5







கும்பகோணத்தில் மகாமகம்
உலகப் பிரசித்தம்.

கும்பகோணம் வெற்றிலை
தமிழ் நாட்டில் பிரசித்தம்.

அதேபோல

பாக்குத்தூளில் பிரசித்திப் பெற்றது

# 'அசோகா'




தயாரிப்பவர் :

**எம். கே. கிருஷ்ண செட்டி**

அசோகா பாக்டரி :: கோயமுத்தூர்

ஜை - 46

விய
மலர் 13

# சக்தி

ஆவணி
இதழ் 5

மெய்ப்பொருள் காண்பது அறிவு

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

## சுதந்தரப் பாதையில்

அரசியல் கண்ணாமூச்சி விளையாட்டு முடிந்தது: அரசாளும் காரியத்தில் புகுந்தாயிற்று; இடைக்கால மத்திய தேசிய சர்க்கார் உருவாகிவிட்டது. இந்திய மக்களின் உண்மையான பிரதிநிதிகள் நாடாளத் தொடங்கிய செப்டம்பர் 2-ம் தேதி பிரிட்டிஷ்-இந்திய உறவில் ஒரு புதிய சகாப்தத்தை உண்டாக்கி யிருக்கிறது. நாடெங்கும் மகிழ்ச்சி; உலகெங்கும் திருப்தி. புதிய சர்க்காரில், ராஷ்டிரபதி ஜவாஹரின் தலைமையில், ஆளும் பொறுப் பேற்றுள்ளவர்களில் சர்தார் பட்டேல், ராஜேன் பாபு, ஆஸப் அலி, ராஜாஜி, சரத் சந்திர போஸ், டாக்டர் ஜான் மத்தாய், சர்தார் பலதேவ சிங் ஆகியவர்களைத் தேச மக்கள் அனைவரும் நன்கறிவர். மற்ற அங்கத்தினர்கள், இவர்களைப்போல் பிரபலஸ்தர்கள் அல்லாவிட்டாலும், தேசத் தொண்டிலும், நிர்வாகத் திறமையிலும், அனுபவத்திலும் இவர்களுக்கு நிகரானவர்கள் என்றே சொல்ல வேண்டும். புதிய சர்க்காரில் முஸ்லிம் லீக் சேராத நிலையில், இதைவிட நல்லபடியாய்த் தேச மக்கள் அனைவருக்கும் திருப்தி தருகிற முறையில் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத் திருக்க முடியாது.

லார்டு வேவல் தமது ரேடியோப் பேச்சில் சொல்லியபடி, காய்தே ஆஜம் ஜின்னா காங்கிரஸோடு ஒத்துழைக்க முன் வந்தால் இன்னும் முஸ்லிம் லீக்குக்கு இடைக்கால சர்க்காரில் இடம் இருக்கவே இருக்கிறது. கல்கத்தாப் படு கொலை போன்ற காரியங்களைச் செய்வதால் சுதந்தரப் பாதையில் முட்டுக்கட்டை போட்டுவிட முடியாது. பூரண சுதந்தரம் பெறுவதற்கு முன்னர் எத்தனையோ சங்கடங்களைச் சமாளித்தாக வேண்டும். பஞ்சம், வகுப்புத் துவேஷம், தொழிலாளர் குறைகள் ஆகிய மகத்தான பிரச்னைகளுக்கு உடனடியாகப் பரிகாரம் தேடி ஆக வேண்டும். அடிமை மக்களைச் சுதந்தர புருஷர்களாக மாற்றுவது சுலபமான காரிய மல்ல. இத்தனையும் செய்வதற்கு அடிகோலியாயிற்று. சுயராஜ்யம் நெருங்கி வந்துகொண் டிருக்கிறது. லீக்கும் காங்கிரஸும் ஒத்துழைத்தால் அதை மிக விரைவில் அடையலாம். ஜின்னா சாகேப்பும் லீக்கர்களும் வீண் சந்தேகங்களுக்கு இடங்காாமல், தேசப் பணியில் சுணங்காமல் உடனே கலந்து கொள்ள வேண்டும்.



# காலச்சூழல்

பிரகாசம் வாழ்க : நமது மாகாண சர்க்காரின் பிரதம மந்திரி ஆந்திர கேசரி ஸ்ரீ டி. பிரகாசத்தின் 75-வது பிறந்த நாள் விழாவை 23-8-46-ல் சென்னையிலும் பிற இடங்களிலும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடினார்கள். நாட்டு நலனையே தமது வாழ்வின் உயிர் மூச்சாகக் கொண்டு, அறப் பணியாற்றி வரும் இந்தப் பெரியார் நீடூழி வாழ வேண்டுமென்று அவரை வாழ்த்துகிறோம்.

கல்கத்தா ரணகளம் : ஸ்ரீ ஜின்னாவின் ஆத்திரப் பேச்சால் போதை ஏறிய வங்காள லீக் சர்க்கார் பிரதமர் ஸ்ரீ சூராவர்தி 16-8-46-ல் தொடங்கி வைத்த போராட்டம் கல்கத்தாவைப் பிணக் காடாக ஆக்கிவிட்டது. 5,000 பேருக்கு மேல் மடிந்து போயினர். லீக் சர்க்கார் தன் கடமையில் தவறி விட்டது. கவைக்குதவாத வங்க கவர்னரை வாபஸ் பெற வேண்டும். உடனே கல்கத்தா கலவரத்தைப் பற்றிப் பாரபட்சமற்ற விசாரணை நடத்தி உண்மைக் குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டிக்க வேண்டும். இனி இத்தகைய கலவரம் எங்கும் நிகழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இடைக்கால சர்க்கார் இது விஷயமாகத் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள் என்று நாம் திண்ணமாக நம்புகிறோம்.

பஞ்சமோ பஞ்சம் : செப்டம்பர், அக்டோபர் மாதங்கள் நிரம்ப நெருக்கடியானவை. ஜாவாவிலிருந்து வந்த அரிசி அதிகமில்லை. சயாமிலிருந்து எதிர் பார்த்திருந்த அரிசியையும் வர வொட்டாதபடி செய்து விட்டது பிரிட்டிஷ் சர்க்காரின் வியாபார மனப் பான்மை. மழை நிறையப் பெய்திருந்தாலும், உள்நாட்டு உற்பத்தி பெருகக் காலம் பிடிக்கும். நமது மாகாணத்துக்குத் தர வேண்டிய பங்கீட்டுக்கு மத்திய சர்க்கார் நாமம் சாத்தி விட்டதோடு, சென்னைக்குச் சரக்குக் கொண்டுவந்த கப்பல்களையும் நமக்குத் தெரியாமல் கல்கத்தாவுக்கு ஓட்டிவிட்டார்கள். சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குக் கொடுத்த சூடு உறைத்து, மத்திய சர்க்கார் இனியாவது நம்மிடம் ஒழுங்காக நடந்து கொள்வார்கள் என்று எதிர் பார்க்கலாம்.

ரயில்வே வேலை நிறுத்தம் : மாகாணம் முழுவதும் பயந்து எதிர்பார்த்திருந்த தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம் 25-8-46 முதல் நடந்து வருகிறது. வர்மம் வைத்துக் கொண்டு, போன அகில இந்திய மறியல் ஏற்பாட்டில் கலந்து கொண்டவர்களைச் சாக்குபோக்குச் சொல்லி வேலையிலிருந்து விலக்கியது நியாயமல்லதான். ஆனால், அதற்காக உணவுப் பஞ்சம் உச்ச நிலையை அடைந்திருக்கும் இந்தச் சமயத்தில் இப்படி மறியல் செய்யத் தொடங்கியிருப்பது சற்றும் உசித மல்ல. பரிகாரத்துக்கு வழியில்லாமலில்லை. இரு தரப்பினரும் இணங்கி வரவேண்டும்; மறியல் உடனே நிற்க வேண்டும் என்று சம்பந்தப்பட்டவர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.



# பெர்னுர்டு ஷா

பாகோ

'ஷா விழா'க் கொண்டாடுகிறது உலகம். அவருக்கு வயது 90 ஆகிறது.

அறிவுலகின் புகழ்ச் சிங்காதனத்தை அலங்கரிக்கிருர் ஷா. புதுமைச் சிந்தனை, கருத்துத் தெளிவு, புரட்சி வேகம், நாட்ஞ்சும் நாவன்மை, நையாண்டி நடை, வற்ருத நகைச் சுவை, உளத் திண்மை, தளராத தன்னம்பிக்கை—இவை ஷாவின் தனிச் சிறப்புக்களாகும்.

ஷா சிறந்த நாடகாசிரியர் மட்டுமல்ல; சிறந்த எழுத்தாளர், ஆணித்தரமாய் அபிப்பிராயங் கூறும் விமரிசகர், பெரிய சர்ச்சை வாதி, பொருளாதார அறிஞர், ராஜீய வாதி, தத்துவ ஞானி...இன்னும் எவ்வளவோ. இவருக்கு 'இது வரும், இது வராது' என்று கிடையாது. பல துறைகளிலும் பிரகாசிக்கும் மேதை அவர். ஒரு ராக்ஷஸ மூளை அவருடையது.

ஷாவின் புகழுக்கு அவருடைய நாடகங்களும், அவற்றினுடைய நீண்ட முகவுரைகளுமே முக்கிய காரண மாகும். நாடக உலகில் ஷேக்ஸ்பியருக்குப் பிறகு ஷா தான்.

"மீண்டும் மெதுசலாவுக்கே" "மனிதனும் அதிமனிதனும்," "பிக்மேலியன்," "ஜான் புல்லுடைய மற்ருெரு தீவு" "மிஸிஸ் வாரன்ஸ் ப்ரொஃபஷன்" போன்ற அவருடைய நாடகங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை; அவை இலக்கிய உலகின் சிரஞ்சீவிச் சிருஷ்டிகள்.

முன்னேற்றக் கருத்துக்களை உடைய தீவிர சீர்திருத்தவாதி ஷா. சமூக வாழ்வின் சீர்கேடுகளை எதிர்த்து எவ்வளவோ போராடி யிருக்கிருர். நையாண்டி மூலம்—உண்மைகளை வன்மையோடு எடுத்துக் கூறுவதன் மூலம்—அசட்டுத்தனத்தையும், ஊழலையும், அநீதியையும் தாக்கித் தகர்ப்பதில் இணை யற்றவர். சமூகத் துறையில் அவர் வற்புறுத்திய விஷயங்களில் அனேகம் இன்று நடைமுறையில் வந்துவிட்டன. இங்கிலாந்தில் அவருடைய யோசனைகளை அனுசரித்து இரண்டு பார்லமெண்டு சட்டங்களை இயற்றி யிருக்கின்றனர்.

அரசியல் சுதந்தரத்தை விட அவர் பொருளாதார சுதந்தரத்தையே அதிகமாக வற்புறுத்துகிருர். பொருளாதார சுதந்தரமின்றி உண்மையான ஜனநாயகம் இல்லை. சமூகத்தில் எல்லோருக்கும் சம வருமானம் இருக்க வேண்டும். பல வகுப்புகளுக்கிடையே மணம் அப்போது சாத்தியமாகும். கலப்பு மணத்தால் பிறக்கும் சந்ததிகள் ஆரோக்கியமாக விருக்கும். ஷா ஒரு பெண்ணுரிமை வாதி. நாட்டின் ஆட்சி முறையில் "ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக"ப் பங்கு கொள்ளும் வரை அமைதி வாழ்வு என்பது உலகில் சாத்தியமே யில்லை என்கிருர் ஷா. சமூக வாழ்வில் ஆண் பெண் உறவுகளில் பூரண சமத்துவம் நிலவ வேண்டும் என விரும்புகிருர். கல்யாணம் என்பது மாற்றமுடியாத மதச் சடங்காக

பேரறிஞர் ஷாவைப் பற்றிய ஒரு சிறு ஆராய்ச்சி இந்தக் கட்டுரை.

—பிரிக்க முடியாத பந்தமாக —இருக்கக் கூடாது. விவாக ரத்து உரிமை இருக்க வேண்டும் என்கிருர்.

நார்வீஜிய நாடகாசிரியர் இப்சன்தான் ஷாவின் குரு. இப்சனின் 'இலான் விடே' என்ற 'உயிர்ச் சக்தி'த் தத்துவத்தில் அபாரப் பற்றுதல் கொண்டவர் ஷா. 'வளர்ச்சிப் பரிணமம்' தான் ஷாவின் கோட்பாடு என்று சொல்லலாம்.

ஷாவுக்கு மதத்தில் நம்பிக்கை கிடையாது. விக்ரக வழிபாட்டை வெறுக்கும் அவர், பிரார்த்தனையின் அவசியத்தை மட்டும் உணர்ந் திருக்கிருர். ("பிரார்த்தனையே முக்கியம், பிரார்த்தனைத் தேவன் அல்ல") என்பதே அவர் கொள்கை.

கத்தோலிக்க மதச் சடங்கான ஞானஸ்நானம், கட்டாய அம்மை குத்தல் — இவற்றில் ஷாவுக்கு நம்பிக்கை கிடையாது.

இன்றைய வரித் திட்டம், தனிச் சொத்துரிமை, புல்லுருவிச் சுவான்தார்கள், ஹார்லித் தெரு வைத்திய நிபுணர்கள்— எல்லாவற்றையும் ஷா வெறுக்கிருர்.

ஷா சைவ உணவே சாப்பிடுகிருர். புலால் உண்ப தில்லை. குடிப்ப தில்லை. சுருட்டுப் புகைப்பது கிடையாது.

இயற்கை உணவுகள், இயற்கைச் சிகிச்சைகள், ஒலி உச்சரிப்பு முறை, ஆண்—பெண் கூட்டு வாக்குரிமை—இவைகளை ஷா ஆதரிக்கிருர்.

'நாமார்க்கும் குடி யல்லோம் நமனை அஞ்சோம்' என முழங்கும் அபிநவ நக்கீரன் ஷா. எந்த விஷயத்தைப் பற்றியும் ஷா வெளியிடும் அபிப்பிராயம் எப்போதும் ஆணித்தரமாகவே இருக்கும். அவ்வப்போது, அனேக விஷயங்களைப் பற்றி ஷா என்ன நினைக்கிருர் என்பதை அறிவதில்தான் உலகம் எத்தனை அக்கறை காட்டுகிறது! சென்ற யுத்தத்தில் அயர்லாந்து நடுநிலைமை வகித்தது. ஷா அதைப் பூரணமாக ஆதரித்தார். 1942 ல் நம் தலைவர்கள் சிறைப்பட்டபோது, "பிரிட்டிஷ் மன்னர் தன் மந்திரி சபையின் முட்டாள்தனத்துக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, அந்தத் தலைவர்களை நிபந்தனை யின்றி உடனே விடுதலை செய்ய வேண்டும்" என்று துணிந்து கூறியவர் ஷா. அணுக் குண்டு ஆயத்துக் கிளம்பிய போது, "நாகரிக உலகம் விஞ்ஞானத்தோடு குரங்காட்டம் தொடங்கிவிட்டது, அழிவுதான் இனி" என்று எச்சரித்தார்.

பிரசாரத்தில் நிபுணன் ஷா. அவர் சொல்லுக்கு வெல்லுந் திறன் உண்டு. டபிள்யு. எச். டேவிஸ் என்ற கவியைக் கைதூக்கி விட்டார் ஷா. சாமுவேல் பட்லருக்கு ஷா தந்த ஆதரவால் பட்லரின் நூல்களுக்குப் பிரமாத கிராக்கி ஏற்பட்டது.

தற்பெருமையில், சுய விளம்பரத்தில் ஷாவுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. தன் எழுத்துக்களைத் தானே பாராட்டிக் கொள்வதை ஷாவிடம்தான் காண முடியும். "அவ்வப்போது என் எழுத்துக்களிலிருந்தே நான் மேற்கோள் காட்டுவது வழக்கம். ஏனெனில் அவை என் எழுத்துக்களுக்கு மிகுந்த சுவை யூட்டுகின்றன" என்று கூறுகிருர் ஓரிடத்தில். 'உங்கள் நாடகங்களில் நீங்கள் அதிகம் விரும்புவது எது?' என்று ஒருவர் கேட்டதற்கு ஷாவின் பதில் இதுதான்: "என்னுடைய நாடகங்கள் பந்தயக் குதிரைகள்

அல்ல. ஒருமுறை அவற்றை எழுதி முடித்துவிட்ட பிறகு மீண்டும் அவற்றைப் பற்றி நினைப்பதற்கே எனக்கு அவகாசம் இருப்ப தில்லை.''

தன் பலத்தையும் செல்வாக்கையும் நன்கு உணர்ந் திருக்கிறார் ஷா. (முன்பு ஒரு முறை ஷாவைப் பார்லமெண்டுத் தேர்தலுக்கு நிற்கச் சொன்னார்கள், அவருடைய நண்பர்கள். ஆனால், ஷாவோ, "பார்லமெண்டுக்குள் இருக்கும் நூறு அங்கத்தினரை விட வெளியே யிருக்கும் ஒரு ஷா அதிகச் சக்தி வாய்ந்தவன்'' என்று கூறி மறுத்து விட்டார்.)

(சமீபத்தில் மேல் நாடு சென்றிருந்த தேவதாஸ் காந்தி ஷாவைச் சந்தித்தார். மதுவிலக்கு விஷயமாய் இவர் கேட்ட கேள்விக்கு ஷா அளித்த பதில் சுவையானது. அது அவருடைய தற்பெருமையை, தன்னம்பிக்கையைப் பறை சாற்றுவதாகவே இருக்கிறது. "உங்கள் நாட்டில் மதுவிலக்கு சம்பந்தமாகப் பலத்த பிரசாரம் செய்வதைவிட மக்களிடம் சென்று 'உங்கள் ஷா மதுவைக் கையாலும் தொடுவ தில்லை' என்று கூறுங்கள். அதன் விளைவு உங்கள் பிரசாரத்தைவிடப் பன்மடங்கு அதிகப் பயன் உள்ளதாக இருக்கும்'' என்றார் ஷா.)

"மனித ஆயுள் மிக அற்பமாயிருப்பதால், மனித வாழ்வு பயனற்றதாகப் போகிறது. குறைந்த பட்சம் முன்னூறு ஆண்டுகளாவது மனிதனுக்கு ஆயுள் இருக்க வேண்டும், அவன் தேவ ஜீவனம் பெற வேண்டுமானல்'' என்று கூறுகிறார் ஷா தனது "மீண்டும் மெதுசலாவுக்கே'' என்ற நாடகத்தில்.

முன்னூறு ஆண்டுகள் வாழ்வதென்பது இப்போது சாத்தியமில்லாமல் இருக்கலாம். ஆனல், நூறாண்டுகள் மனிதன் நிச்சயம் வாழ முடியும். தனது நூறாண்டுக் கொண்டாட்டத்தையும் நேரில் கண்டு மகிழும் பேற்றை இறைவன் அவருக்கு அளிப்பாராக.



### இனி நடக்காது!

நமது மேலை உலகமும், நமது கற்பனை உயர்வு மெல்லாம், இன்று சோதனைக்கு ஆட்பட்டிருக்கின்றன. நமது ஜம்பமும் ஆர்ப்பாட்டப் பேச்சும், ஆசியாவைச் சற்றும் உற்சாகப்படுத்த வில்லை. மத்தியக் கிழக்கு நாடுகளின் மக்கள், தங்கள் சொந்தப் பலத்தை இப்போது அறிந்துகொண்டு விட்டார்கள். உலகத்தின் வருங்காலத்தைப் பற்றிய அநேகம் முடிவுகள், தங்கள் கையிலேயே இருக்கின்றன என்று அவர்கள் உணர ஆரம்பித்து விட்டார்கள். அந்த முடிவுகள், ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும், அந்நிய ஆதிக்கத்தினின்று விடுதலை—பொருளாதாரத்திலும், சமூக வாழ்விலும், ஆன்ம வளர்ச்சியிலும் விடுதலை—அளிப்பவையா யிருக்கவேண்டு மென்று அவர்கள் நிச்சயித் திருக்கிறார்கள்.

—வெண்டல் வில்கி

### கற்றுக்குட்டிதான்

ஒவ்வொரு கலைஞனும் ஆரம்பத்தில் ஒரு கற்றுக்குட்டியாக இருந்தவன்தான்.

—எமர்சன்

# கவிஞர் பதில்

●

'கண்டு உவந்தோன்'



பண்டைத் தமிழ் இலக்கியத்தின் மேம்பாட்டிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும் கம்பராமாயணத்தின் சிருஷ்டி கர்த்தாவிற்குத் தமிழ் மக்கள் தங்கள் வணக்கத்தைச் செலுத்திய மறு நாள் (28—7—46), இன்றையத் தமிழுக்கும் தமிழகத்திற்கும் புத்துயிர் அளித்து வரும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனையும் கௌரவித்தனர். சென்ற மாதம், சென்னையில் நடைபெற்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நிதியளிப்பு விழாவில், கட்சி, மத வித்தியாசங்களின்றிப் பல தலைவர்களும் கலந்து கொண்டார்கள். ரூ. 24,399 அடங்கிய ஒரு பண முடிப்பைப் அளித்து, பொன்னாடை கொண்டு புலவரைப் போர்த்து மகிழ்ந்தனர். கவிஞர் அன்று பேசிய பேச்சைக் கேட்டவர்கள், அவருடைய எழுத்தைப் போலவே, பேச்சும் வேகமும், அர்த்தமும் நிறைந்திருப்பதைக் கண்டனர். கவிஞரின் பிரசங்கச் சாரமாவது:

எனக்கு இன்று அளித்த கௌரவத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இது எனக்கு அளித்த கௌரவமல்ல; தமிழுக்கு அளித்த கௌரவம்.

செய்யத் துணிபவனுக்கு, எண்ணத் துணிபவனுக்குத்தான் வெற்றி கிட்டுகிறது. தன்னுடைய செயல் முறையும், கொள்கையும் சரியானதென்று நம்புபவன், எந்த எதிர்ப்புக்கும் அஞ்சி, கொள்கையினின்றும் பிறழக் கூடாது. இவனுக்கு என்றாவது ஒரு நாள் வெற்றி வந்தே தீரும். என் வாழ்நாள் முழுவதும் இதுவே என் கொள்கையாக இருந்துவந்திருக்கிறது. சுயேச்சையான மனோபாவத்திடம் எனக்கிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையின் பலன்தான், நான் இன்று பெற்றிருக்கும் இந்தப் பண முடிப்பு.

இன்று, தமிழகத்தில் பழமையின் சிறப்பைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தால் போதும் என்னும் மனோபாவம் பொதுவாகப் பரவி யிருக்கிறது. இது முன்னேற்றத்துக்கு வழி காட்டாது. பழமையை உதறித் தள்ளி, புது வழியை மேற்கொள்ளுபவன் தான் உண்மையான சேவை செய்தவன்.

தமிழுக்குச் சிறந்த எதிர் காலம் இருக்கிறது. மக்களின்

"செய்யத் துணிபவனுக்கு, எண்ணத் துணிபவனுக்குத்தான் வெற்றி கிட்டுகிறது. தன்னுடைய செயல் முறையும், கொள்கையும் சரியான தென்று நம்புபவன், எந்த எதிர்ப்புக்கும் அஞ்சி, கொள்கையினின்றும் பிறழக் கூடாது."

தமிழ்க் காதல் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. கரையான் அரித்த பழைய துறையி லிருந்து மெல்ல மெல்ல விலகிப் புரட்சி கரமானப் புதுத் துறையில் செல்ல ஆரம்பித் திருக்கிறார்கள் இன்றைய நவயுக எழுத்தாளர்களும் கவிகளும். தமிழ நாட்டின் எதிர் காலம் சிறப்படைய வேண்டு மானால், அதற்கு உண்மை யாகவே புத்துயிர் பிறக்க வேண்டுமானால், இத்தனை எழுத் தாளர்களும் கவிகளும், குறுகிய சாதி வேறுபாடுகளைத் தகர்த்து எறியக் கங்கணம் கட்டிக் கொண்டு புறப்பட வேண்டும். அடிமை மனப் பான்மையை ஒழித்து, சுயேச்சையான எண் ணத்தையும், பரந்த நோக்கங் களையும் வளர்க்க முற்பட வேண்டும்.

“இந்த விஷயத்தைப் பற்றி எழுது!” என்று கவிஞனிடம் ஒப்பந்தம் பேசுவது நடக்காத காரியம். குறிப்பிட்ட ஒரு விஷயத்தைப் பற்றி, இன்னொருவர் சொல்லி, கவி எழுத முடியாது. ஒரு கொடுமையை அல்லது ஒரு காட்சியைக் கண்ட அளவில் உணர்ச்சி தூண்டக் கவி எழுத வேண்டும்.

என் இளைய நண்பர்களுக்கு நான் கூற விரும்புவது இதுதான்: தமிழ் படி; தமிழ் பேசு; தமிழ் எழுது. கொடுமை கண்ட விடத்து எதிர்த்துப் போராடு. யாரேனும் தமிழைப் பழித்தால் லேசில் விடாதே.

அச்சமின்மையை வளர். புரட்சி மனப்பான்மை என்னுள் புகுந்தபொழுது எனக்கு எவ்வளவோ எதிர்ப்புக்கள் ஏற் பட்டன. நான் அவைகளைக் கண்டு அஞ்சவில்லை. ஏனெனில், எதிர்ப்பி லிருந்து நன்மை பிறக் கிறது; அறிவு வளர்கிறது. பாரதியார் “அச்சம் தவிர்” என்றும், “போர் முனை விரும்பு” என்றும்தான் கூறி யிருக்கிறார். தமிழ் வாழ்க!

✲

## எது கல்வி?

“கல்வியின் நோக்கம் என்ன வென்பதைப் பற்றி நாம் நிச்சய மற்றவராக இருக்கக் கூடாது. மற்றொருவன் அடைந்திருக்கும் பயிற்சி யைப் பாராட்டவோ அல்லது குறைகூறவோ செய்கிறபோது, நாம் நம்மைப் படித்தவர்க ளென்று கருதிக் கொள்கிறோம். மற்றவனை ஏதோ ஒரு விஷயத்தில், உதாரணமாக வியாபார விஷயத்தில் அல்லது கப்பல் தொழிலில் படிப்பில்லாதவன், அதாவது அந்தத் துறையில் பயிற்சி இல்லாதவ னென்று சொல்கிறோம். நாம் கூறுகிற கல்வியின் நோக்கம் இது வன்று. சிறு வயதி லிருந்து ஒருவனை ஒழுக்கத்தில் பயிலுவிப்பது எதுவோ, எது அவனை ஒழுங்குள்ள பிரஜையாக இருக்க வேண்டுமென்ற ஆவலுடையவனாகச் செய்கிறதோ, எது அந்தப் பிரஜைக்கு நீதி முறை யாக ஆள்வதற்கும் ஆளப்படுவதற்கும் தெரியப்படுத்துகிறதோ அதற்குத் தான் கல்வி யென்று நாம் சொல்லுகிறோம். மற்றப்படி பணம் சம்பாதிப் பதையோ, தேகபலத்தை விருத்தி செய்து கொள்ளுவதையோ வேறு துறைகளில் பயிற்சி பெறுவதையோ நோக்கமாகக் கொண்ட எந்தக் கல்வி முறையும் சிந்தனை யற்ற யந்திரந்தான்; மன விரிவற்றதுதான். இதனைக் கல்வி யென்ற பெயரிட்டே அழைக்கக் கூடாது.

விஷயத் துணுக்குகளை மூளையிலே திணிக்கச் செய்வது கல்வி யல்ல; ஆத்மாவின் கண்ணை அறிவு வெளிச்சத்தின் பக்கம் திருப்புவது தான் கல்வி.”

பிளேட்டோவின் அரசியல்

# உலகத்தின் வேலி

●

மு. வரதராஜன்

உலகம் பொல்லாதது, உலகம் பொல்லாதது என்று எல்லாரும் முறையிடுகிறார்கள். ஏன் பொல்லாதது ஆயிற்று என்று எண்ணுவார் ஒருவரும் இல்லை. உண்மைக்குக் காலம் இல்லை, நியாயத்துக்குக் காலம் இல்லை, நன்மைக்குக் காலம் இல்லை என்று எல்லோரும் குறை சொல்கிறார்கள். காலம் ஏன் இப்படிக் கெட்டுவிட்டது என்று ஆராய்கிறவர் ஒருவரும் இல்லை.

உலகம் என்பது ஒன்று தனியாக எங்கோ இல்லை. காலம் என்பதும் ஒன்று தனியாக இல்லை. மக்கள் வாழும் வாழ்க்கையைப் பொறுத்தே உலகத்தின் நிலைமையும் காலத்தின் நிலைமையும் மாறி மாறி அமைகின்றன. அதனால், உலகம் பொல்லாதது என்று உலகத்தைப் பழிப்பதை விட்டு, வாழ்க்கையை நடத்தும் மக்களைப் பழிக்க வேண்டும். காலம் கெட்டுவிட்டது என்று காலத்தைப் பழிக்காமல், மக்களின் வாழ்க்கையைப் பழிக்க வேண்டும். புகழும் போதும் இப்படித்தான் செய்ய வேண்டும்.

ஔவையார் என்னும் பெரும் புலவர் இது போன்ற கருத்தை வற்புறுத்தியிருக்கிறார். நாடு அல்லது காடு, மேடு அல்லது பள்ளம் என்னும் இந்த வெளித் தோற்றத்தைக் கண்டு யாராவது நல்ல நிலம் கெட்ட நிலம் என்று பிரிக்கிறார்களா? அவ்வாறு பிரிப்பது தான் பொருத்தம் ஆகுமா? மக்கள் எந்தப் பகுதியில் நல்லவர்களாக விளங்கிச் சிறந்த வாழ்வு வாழ்கிறார்களோ, அந்த நிலப் பகுதியை நல்ல நிலம் என்று கூற வேண்டும். எங்கே நல்ல மக்கள் இல்லையோ, அந்த நிலப் பகுதியை நல்ல நிலம் என்று கூற முடியாது. —இதுதான் அந்தப் புலவர் வற்புறுத்தியுள்ள கருத்து.

> நாடா கொன்றோ
> காடா கொன்றோ
> அவலா கொன்றோ
> மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர்
> ஆடவர்
> அவ்வழி நல்லை
> வாழிய நிலனே
>
> (புறநானூறு-187)

இப்படிப்பட்ட ஆராய்ச்சியை இன்றும் செய்ய வேண்டும். செய்த பிறகுதான் உலகத்தையும் காலத்தையும் பழிக்கலாம். கண் மூடி வாய்ப்பாடுகளால் பழித்துப் பேசுவதால் பயன் விளையாது.

உலகம் நல்ல உலகமாக விளங்க வேண்டும் என்றுதான் அரசியல் சட்டங்கள் ஏற்பட்டன. நாடுதோறும் அப்படிப்பட்ட சட்டங்கள் ஏற்படுத்தித்தான் ஆட்சி நடந்து வருகிறது. அமைதியும் ஒழுங்கும் எங்கும் வாழ வேண்டும் என்றே சட்டங்கள் அமைந்தன. ஆனால், சட்டங்கள் அழியாமல் இருக்கின்றன; அமைதி ஒழுங்கு முதலியவை அழிந்து வருகின்றன. அதன் காரணம் என்ன? சட்டங்கள் சிலரிடம் செல்கின்றன; சிலரிடம் செல்வ தில்லை. ஏழைகளை

"முற்காலத்திலும் அறிஞர்கள் உலகத்தைக் காப்பாற்றினார்கள். இக்காலத்திலும் அறிஞர்கள் அவ்வாறு காப்பாற்ற முயல்கிறார்கள். அதன் பயன்தான் அங்கங்கே நடக்கும் இயக்கங்களும் கிளர்ச்சிகளும்" என்கிறார் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகிய கட்டுரையாளர்.

மட்டும் சட்டங்கள் அடக்கி நசுக்குகின்றன; செல்வர்களைக் கண்டதும் அந்தச் சட்டங்களே அடங்கி நசுங்குகின்றன. ஏழைகள் சட்டங்களுக்கு அஞ்சுகிறார்கள்; செல்வர்கள் சட்டங்களை விலை கொடுத்து வாங்குகிறார்கள். ஏழைகள் கொன்றால் கொலை என்று பெயர்; செல்வர்கள் கொன்றால் போர் என்றும், தண்டனை என்றும் பெயர். ஏழைமக்கள் திருடினால் திருட்டு என்று பெயர்; செல்வர்கள் செய்தால் வியாபாரம் என்று பெயர். ஏழைகள் ஒழுக்கம் கெட்டால் விபசாரம் என்று பெயர்; செல்வர்கள் ஒழுக்கம் கெட்டால் நாகரிகம் என்று பெயர். ஏழைகள் புளுகினால் பொய் என்று பெயர்; செல்வர்கள் புளுகினால் தந்திரம் என்று பெயர். இவ்வாறு, சட்டங்கள் ஏழைகளுக்கு ஒரு வடிவிலும், செல்வர்களுக்கு மற்றொரு வடிவிலும் பயன்படுகின்றன. இவற்றை விளக்குவதற்காக அறிஞர் பெர்னார்டு ஷா சிறைச்சாலைகளைச் சுட்டிக் காட்டி, அங்கெல்லாம் ஏழைமக்களே நெடுங்காலம் இருப்பதையும் செல்வர்கள் மட்டும் நுழைந்த வுடனே விடுதலை பெற்று வெளியேறுவதையும் விளக்குகிறார். ஆகையால், பணம் இருக்கும் பக்கமாகச் சட்டங்கள் திரும்புகின்றன. இப்படிப்பட்ட சட்டங்கள் எப்படி அமைதியையும் ஒழுங்கையும் நிலைநிறுத்தி உலகத்தைத் திருத்த முடியும்?

இந்தச் சட்டங்களைச் செய்கிறவர்கள் யார்? முன்னெல்லாம் அரசர்களும், அமைச்சர்களும் சட்டங்களைச் செய்துவந்தார்கள். சில வேளைகளில், அறிஞர்கள் வழிகாட்டி வந்தார்கள். அவர்கள் எல்லோருமே பொதுமக்கள் என்ன எண்ணுவார்கள் என்று ஆராய்ந்து பார்த்தே அந்தச் சட்டங்களை இயற்றினார்கள். சுருங்கக் கூறினால், முற்காலத்தில், சட்டங்களுக்கும் பொதுமக்களின் எண்ணங்களுக்கும் உறவு இருந்துவந்தது; அது மறைமுகமான உறவு.

இப்போது, சட்டங்களுக்கும் பொதுமக்களுக்கும் உள்ள உறவு நேர்முகமான உறவு. இது தான் ஜனநாயகம் எனப்படும் குடியரசால் விளைந்த பயன். இப்போது சட்டங்கள் இயற்றுகிறவர்கள் அரசர்களும் அல்ல; அமைச்சர்களும் அல்ல; பொதுமக்களே. அந்தப் பொதுமக்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து அனுப்புகிறார்கள். அவர்கள், ஒரு சபையாகக் கூடிச் சட்டங்களைச் செய்கிறார்கள். அதனால் தான் அந்தச் சபைக்குச் சட்டசபை என்று பெயர்.

அப்படியானால், நல்ல சட்டங்களை இயற்றி உலகத்தைத் திருத்தலாமே, அந்தப் பொறுப்பு பொதுமக்கள் கையில் தானே இருக்கிறது—என்று கேட்கலாம். அங்கும் ஓர் உண்மை விளங்குகிறது. பொதுமக்கள் நல்லவர்களாகவும், வல்லவர்களாகவும் இல்லை. அதனால் தான் ஊழல் இருந்து வருகிறது. பொதுமக்கள் இன்னும் தாங்களாக எண்ணிப் பார்க்கும் திறமை பெறவில்லை. நாளைக்கு என்ன நடக்கும் என்று அப்பால் எட்டிப் பார்க்கும் பார்வையும் பொதுமக்களுக்கு இன்னும் வரவில்லை. வருமானால், உலகம் உடனே திருந்திவிடும். வரும் வரையில் அல்லல் இருந்தே தீரும்.

இதற்கு உதாரணமாக ஒன்று பார்ப்போம்: ஏழைமக்கள் பலருக்குப் பல தீமை செய்கிறான்

ஒருவன். ஆனால், அவனே நிறை யச் செல்வம் சேர்த்துப் பணக் காரன் என்ற புகழும் பெற்று ஒரு சத்திரம் கட்டி விடுவானா னால், பொதுமக்கள் எல்லோரும அவனைப் புகழ்கிறார்கள். இத னால், பொதுமக்கள் மனம் இன் னும் ஆற்றல் பெறவில்லை என் பது தெரியவில்லையா?

உடம்பைக் கொண்டோ, மூளை யைக் கொண்டோ ஒருநாளும் ஒருவகை உழைப்பும் செய்யாத ஒருவனை எடுத்துக் கொள்வோம். அவன் மற்றவர்களின் உழைப்பை யெல்லாம் காசாக மாற்றிப் பெட்டியில் சேர்த்துவைக்கிறான். பல லட்சரூபாய் சேர்ந்த பிறகு சில ஆயிரம் செலவு செய்து ஒரு கோவில் கட்டுகிறான், அல்லது ஒரு திருவிழாச் செய்கிறான். உடனே, பொதுமக்கள் அவனைப் புகழ்ந்து பாராட்டுகிறார்கள். யாருடைய உழைப்பு, யாருடைய வியர்வை, யாருடைய பணம் என்று எண்ணிப் பார்க்கும் மனம் இன்னும் பொதுமக்க ளுக்கு வரவில்லை என்பது விளங்கவில்லையா?

திருக்குறளில் அறத்துப்பாலில் சொன்ன விதிகள் எல்லாவற்றை யும் மீறி நடந்து ஒருவன் வாழ்க்கை நடத்துகிறான். அவன் ஏழையாக இருக்கும் வரையில் அவனை எல்லோரும் பாவி என்று பழிக்கிறார்கள். கொலைஞன், திருடன், குடிகாரன், காமுகன், பொய்யன், அறமில்லாதவன் என்று அவனை எல்லோரும் கடி கிறார்கள். அவனே எப்படியோ செல்வம் சேர்த்து முன்னுக்கு வருகிறான். ஆனால், பழைய கெட்ட வாழ்க்கை மாறாமல் அப் படியே வாழ்ந்து வருகிறான். அப்போது, அவனைக் கொலைஞன், திருடன், பொய்யன் என்று ஒரு வரும் பழிப்பதில்லை. அதற்கு மாறாக, அவனைப் பொதுமக்கள் புகழ்ந்து பணிகிறார்கள். அவன் இட்ட வேலைகளையும் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அறநூல்களைப் பாராட்டும் திரு விழாக்கள், அறநிலையத் திறப்பு விழாக்கள், அறவோர் நினைவு நாட்கள் முதலியவற்றுக்கு அவ னையே தலைவனாக்கி, அவன் திரு வடியின்கீழ்க் காத்துக்கொண் டிருக்கிறார்கள். இதனால் பொது மக்களின் மனம் இன்னும் அறத் தில் உறுதிப்படவில்லை என்று தெளிவாகிறது அல்லவா?

இப்படியெல்லாம் அறம், அமைதி, ஒழுங்கு எல்லாம் கெடுவதற் குத் தாங்களே காரணமாக இருந்துவிட்டு, உலகம் பொல்லா தது என்றும், காலம் கெட்டுவிட் டது என்றும் பொருள் தெரியா மல் பழிக்கிறார்கள்.

சட்டங்களும் வலிமை இழந்த நிலையில், பொதுமக்களும் ஆற்றல் பெறாத நிலையில் உலகம் திருந்த வழி இல்லை என்று சோர்வடை யக் கூடாது. முற்காலத்திலும் அறிஞர்கள் உலகத்தைக் காப் பாற்றினார்கள். இக் காலத்தி லும் அறிஞர்கள் அவ்வாறு காப் பாற்ற முயல்கிறார்கள். அதன் பயன்தான் அங்கங்கே நடக்கும் இயக்கங்களும் கிளர்ச்சிகளும்.

முற்காலத்தில் அறிஞர்களின் கடமை எளியது. அப்போது, சிலர் அமைச்சர்களாக அமைந்து விட்டால் போதும். சட்டங்களை யும் ஏற்படுத்தி, அந்தச் சட்டங் கள் நேர்மையாக ஆளும்படி யாகவும் செய்ய அவர்களால் அப்போது முடிந்தது. இப் போது, அவர்கள் பொதுமக்க ளைத் தட்டி எழுப்பி, தூண்டி விட்டு, இயக்கம் அமைத்து, கிளர்ச்சி விளைக்கவேண்டியிருக் கிறது. ஏனென்றால், முற்காலத்தில்

ஆள்வோர் சிலர்; ஆளப்படுவோர் பலர். இக்காலத்தில் எல்லோரும் ஆள்வோர்; எல்லோரும் ஆளப் படுவோர். எல்லோரும் குடிமக்கள்; எல்லோரும் முடிமன்னர். இதுதான் குடியரசின் இயல்பு; இதனால்தான் இயக்கங்களும் கிளர்ச்சிகளும் வேண்டியிருக்கின்றன.

அறிஞர்கள் அந்தக் கால முதல் இந்தக் காலம் வரையில் ஒரே நெறியில் வாழ்க்கையைக் கோலி வருகின்றார்கள். அன்று வற்புறுத்திய உண்மைகளை இன்றும் வற்புறுத்தி வருகிறார்கள். ஆனால், அன்று சிலர் மட்டும் திருந்தி, நல்லவர்களாகவும் வல்லவர்களாகவும் இருந்தால் போதும்; மற்றவர்கள் அவர்களைப் பார்த்துக் கண் மூடி நடந்தால் போதும் என்று நம்பினார்கள். அந்த நம்பிக்கை தோற்றுவிட்டது. பல பரீட்சைகளில் அது தவறிவிட்டது; பல முறையும் தோற்றுவிட்டது. அதனால்தான் இப்போது அறிஞர்கள் குடியரசு முறையை வற்புறுத்துகிறார்கள். எல்லோரும் உரிமை பெற்றால்தான், எவரும் ஏமாறாமல் வாழ வழி உண்டு என்று எடுத்துரைக்கிறார்கள். எல்லோரும் வல்லவர்களாக ஆனால்தான், எவரும் ஏங்காமல் வாழ முடியும் என்று விளக்குகிறார்கள். எல்லோரும் வல்லமை பெற்றால்தான், எல்லோரும் நல்லவர்களாக வாழக் கூடும் என்று தெளிவாகச் சொல்கிறார்கள். அப்போதுதான் உலகம் நல்லது, காலமும் நல்லது என்று காணமுடியும் என்பது அவர்கள் பெற்றுள்ள புதிய நம்பிக்கை.

இந்த முயற்சியில் சட்டங்கள் தோற்ற பிறகும், பொதுமக்கள் சோர்ந்த பிறகும் அறிஞர்கள் பின்வாங்கவில்லை; அவர்களிடம் தளராத உறுதி இருந்துவருகின்றது. அதுதான் அவர்களுடைய மனச்சான்றின் உறுதி. சட்டங்கள் பணத்துக்குப் பணிந்துவிட்டன; பொதுமக்கள் பணத்துக்குப் பணிந்துவிட்டார்கள்; ஆனால், அறிஞர்கள் பணியவில்லை. பணம் பெரியது அல்ல, குணமே பெரியது என்று தொன்றுதொட்டுச் சொல்லி வருகிறார்கள். அறத்தை வணங்கு, அதிகாரத்தை வணங்காதே என்று அன்றுமுதல் வலியுறுத்தி வருகிறார்கள். ஆனால், சட்டங்கள் குணத்தைவிட்டுப் பணத்தின் பின்னே சென்றன. பொதுமக்கள் அறத்தை வணங்காமல், அதிகாரத்தை வணங்கினார்கள். அறிஞர்கள்மட்டும் மனச்சான்றின் வழியில் உறுதியோடு நின்றார்கள். அந்தச் சான்றோர்களால்தான் உலகம் திருந்தப்போகிறது.

உலக வாழ்க்கையைக் கெடுக்கவும் எடுக்கவும் ஆற்றல் பெற்றுள்ளவை மூன்று: சட்டம், பொதுமக்கள் போக்கு, சான்றோர் மனச்சான்று. இம் மூன்றும் மூன்றுவகை வேலிகள். சட்டம் உளுத்தால் பொதுமக்கள் தாங்கலாம்; பொதுமக்கள் ஏமாந்து கலங்கினால் சான்றோர் தாங்குவது திண்ணம். சான்றோரின் மனச்சான்றே உண்மையான வேலி. இதனால்தான் திருவள்ளுவர் அவர்களைப் போற்றும்போது, "பண்புடையவர்கள் இல்லையானால், உலகம் எப்போதோ மண்ணாய், மறைந்து அழிந்து போயிருக்கும்" என்றார்.—"பண்புடையார்ப் பட்டு உண்டு உலகம் அது இன்றேல் மண்புக்கு மாய்வது மன்."

(திருக்குறள்

# சோம்பேறி வஸ்து

●

பொ. திருகூடசுந்தரம்

உலகத்திலுள்ள வஸ்துக்கள் எத்தனையென்றுகேட்டால் எண்ணிறந்தன என்று எல்லோரும் கூறுவார்கள். ஆனல் அது தவறு. உலகத்தில் இதுவரை கண்டு பிடிக்கப்பட்ட தனி வஸ்துக்கள் தொண்ணூறுதான் என்று விஞ்ஞானிகள் கூறுவார்கள்.

நாம் பார்க்கும் வஸ்துக்கள் அனந்தம் கோடியாக இருக்க, இந்த விஞ்ஞானிகள் அவைகளை எல்லாம் தொண்ணூற்றுக்குள் அடக்கி விடுகிருர்களே, இதென்ன ஆச்சரியம்! அப்படியானல் அவர்கள் கூறும் 'வஸ்து'வும் நாம் கூறும் 'வஸ்து'வும் வேறு வேருே? ஆம், அப்படித்தான். அதனல்தான், இந்த வித்தியாசமான அபிப்பிராயம்.

நாம் சதா காலமும் காற்றைச் சுவாசித்துக்கொண்டிருக்கிருேம், அநேக சமயங்களில் தண்ணீர் குடித்து வருகின்ருேம், சில சமயங்களில் சோறு உண்டு வருகின்ருேம். இப்படிச் சுவாசிக்கும் காற்றையும்,குடிக்கும் ஜலத்தையும், உண்ணும் சோற்றையும் நாம் தனித் தனி வஸ்துக்களாகவே கருதுகின்ருேம். அவைகள் வேறு வேருகத்தான் நமக்குத் தோன்றுகின்றன.

ஆனல் விஞ்ஞானிகள் அவைகளில் எதையும் தனி வஸ்துவாகக் கருதுவதில்லை. காற்றைக் 'கலவை' வஸ்து என்றும் சோற்றையும் ஜலத்தையும் 'ஐக்கிய' வஸ்துக்கள் என்றும், கூறுகிருர்கள். அப்படியானல் அவர்கள் கூறும் 'தனி வஸ்து', 'கலவை வஸ்து', 'ஐக்கிய வஸ்து' என்பவற்றின் லட்சணம்தான் யாது?

எந்த வஸ்துவை அதன் பண்புக்கு மாறுபட்ட பண்புகளுடைய இரண்டு மூன்று வஸ்துக்களாகப் பிரிக்க முடியாதோ, அந்த வஸ்துவே தனி வஸ்து. தங்கம், வெள்ளி முதலிய உலோகங்கள் தனி வஸ்துக்கள். தங்கத்தை எந்த விதத்திலும் தங்கத்தின் குணமில்லாத வஸ்துக்களாகப் பிரித்துவிட முடியாது.

இரண்டு வஸ்துக்கள் ஒன்ருகச் சேர்ந்து தங்கள் பண்புகள் எதுவுமில்லாமல் புதிய பண்புடைய வேருெரு வஸ்துவாக ஆகுமானல், அந்த வஸ்துவையே விஞ்ஞானிகள் 'ஐக்கிய வஸ்து' என்று கூறுகிருர்கள்.

மாம்பழத்தை நறுக்கிச் சாப்பிட்டுவிட்டுக் கத்தியைக் கழுவி ஈரமாக வைத்து விடுகிருேம். மறுநாள் எடுத்தால் அது பளபளப்பாக இல்லாமல் பழுப்பு நிறமாக இருக்கிறது. கத்தியில் துரு ஏறிவிட்டதாகக் கூறுகிருேம். பளபள வென்று மின்னிய இரும்புக் கத்தியில் பழுப்பு நிறமான துரு ஏது? இரும்பும், காற்றிலுள்ள பிராண வாயு என்னும் ஆக்ஸிஜெனும் சேர்ந்து உண்டான ஐக்கிய வஸ்துவே அந்தத் துரு. அதன் குணங்கள் இரும்பின் குணங்களுக்கும் பிராண வாயுவின் குணங்களுக்கும் மாறுபட்டனவாகும்.

அரையில் வெள்ளி அரைநாண் அணிகிருர்கள். சில காலம்

"எதுவும் செய்யாமல் கவனித்துக் கொண்டு நிற்பவர்களும் உதவிசெய்பவர்களே" என்று மில்டன் என்னும் ஆங்கில மகா கவி கூறுகிருர். அதுபோல் ஆர்கன் வாயு சோம்பேறியா யிருந்தாலும் நமக்கு பயன்படவே செய்கிறது.

சென்றபின் பார்த்தால் அது சுத்த வெள்ளை நிறமாக இல்லாமல் கறுப்பாகத் தோன்றுகிறது. அதற்குக் காரணம், வெள்ளியானது உடம்பில் உண்டாகும் வேர்வையிலுள்ள கந்தகத்துடன் சேர்ந்து ஒரு ஐக்கிய வஸ்து உண்டாகிவிட்டதேயாகும்.

அதுபோல்தான் செப்புப் பாத்திரங்களில் களிம்பு பிடிப்பதும். நன்ருகத் தேய்த்து வைத்தாலும் சில காலத்துக்குள் செப்புப் பாத்திரங்களில் பச்சை நிறமான வஸ்து ஒன்று காணப்படும். செம்பு உலோகம் காற்றிலுள்ள கரிய மல வாயுவுடன் கலந்துதான் இந்தப் பச்சை நிறமான ஐக்கிய வஸ்து உண்டாகின்றது.

சாதாரணமாக நாம் சதா காலமும் உபயோகிக்கும் தண்ணீரை ஒரு தனி வஸ்துவாக எண்ணி வருகிறோம். ஆனல், அது தனி வஸ்து வன்று. ஆக்ஸிஜென் என்னும் வாயுவும் ஹைட்ரோஜென் என்னும் வாயுவும் சேர்ந்தே தண்ணீர் உண்டாகிறது. இரண்டு வாயுக்கள் சேர்ந்து ஒரு திரவப் பொருள் உண்டாகின்றது. அந்த வாயுக்களின் பண்புகள் வேறு, அவற்றின் ஐக்கியத்தால் உண்டான தண்ணீரின் பண்புகள் வேறு. இப்படிச் சேர்ந்தபின், தண்ணீரை உளுந்தையும் கல்லையும் வேறு வேருகப் பிரிப்பதுபோல ஆக்ஸிஜென், ஹைட்ரோஜென் என்ற வாயுக்களாக எளிதில் பிரித்துவிட முடியாது. ரஸாயன முறையினல்தான் பிரிக்க முடியும். இதுவும் ஐக்கிய வஸ்துக்களுக்குள்ள சிறப்பியல்பாகும்.

இப்பொழுது உளுந்தையும் கல்லையும் எளிதில் பிரித்துவிடலாம் என்று சொன்னேம். இந்த இரண்டும் சேர்ந்தது 'கலவை வஸ்து.' இந்தக் கலவை வஸ்துவின் குணம், உளுந்தின் குணமும் கல்லின் குணமும்தான். வேறு புதிய குணம் எதுவும் தோன்றுவதில்லை.

பாலையும் ஜலத்தையும் சேர்க்கிறோம். பாலுக்குள்ள குணமும் ஜலத்துக் குள்ள குணமும்தான் பாலும் ஜலமும் சேர்ந்ததின் குணமாகும். ஆதலால் அதையும் கலவை வஸ்து என்றே கூற வேண்டும். ஆனல், அதை உளுந்தையும் கல்லையும் போல் பிரிக்க முடியாதே என்று கேட்கலாம். ஆம், முடியாதுதான். ஆயினும் அதைப் பிரிக்க ரஸாயன உதவி எதுவும் தேவையில்லை. கொதிக்க வைத்தால் போதும். முதலில் ஜலம் ஆவியாகப் போய்விடும், பின்பே பால் ஆவியாகும்.

உப்பும் ஜலமும் சேர்ந்தால் அதுவும் கலவை வஸ்துத்தான். இரண்டின் சுவைதான் அதற்கும். அதையும் கொதிக்க வைத்தால் ஜலம் ஆவியாகப் போய் விடும். உப்பு அடியில் தங்கி விடும்.

இந்தக் காரணங்களால்தான் விஞ்ஞானிகள் இந்த உலகத்தில் தொண்ணூறு தனி வஸ்துக்களே இருப்பதாகவும், அவைகள் சேர்ந்தே கலவைப் பொருள்களும் ஐக்கியப் பொருள்களும் அனந்தம் கோடியாகக் காணப்படுவதாகவும் கூறுகிருர்கள்.

நாம் இடைவிடாமல் சுவாசித்துக் கொண்டிருக்கும் காற்று ஒரு தனி வஸ்து வன்று. கலவை வஸ்துவே யாகும். அதில் முக்கியமாகக் காணப்படுவன ஆக்ஸிஜென் என்னும் வாயுவும் நைட்ரோஜென் என்னும் வாயுவுமேயாகும். இரண்டும் தனி வஸ்துக்கள். அவற்றுள் ஆக்ஸிஜென் காற்றில் ஒரு பாகமாகவும், நைட்

ரோஜென் நான்கு பாகமாகவும் காணப்படுகின்றன. ஆக்ஸிஜென் தானும் எரியும், மற்ற வஸ்துக்கள் எரிவதற்கு அவசியமாயுமிருக்கும். ஆனால், நைட்ரோஜெனோ தானும் எரியாது, எரியும் வஸ்துக்களை அணைத்து விடவும் செய்யும். ஆதலால்தான் ஆக்ஸிஜென் வாயுவைப் பிராண வாயு என்று கூறுகிறார்கள். நாம் சுவாசிக்கும் காற்றிலுள்ள பிராணவாயுதான் நம்முடைய ஜீவனுக்கு ஆதாரமாயிருக்கின்றது. அத்துடன், உள்ளே போகும் நைட்ரோஜன், ஆக்ஸிஜென் வாயுவின் வீறைக் குறைத்து கேடு செய்யாமல் நன்மை மட்டும் செய்யுமாறு பார்த்துக் கொள்கின்றது.

அதுமட்டுமன்று, அது நமக்குச் செய்யும் உபகாரம். அது தான் நம்முடைய பயிர்களின் உரத்திலுள்ள சத்து. நம்முடைய ஊன் சத்தும் அதன் ஐக்யப் பொருள்களாலேயே ஆக்கப்படுகின்றது. பருப்பு, முட்டை, பால் முதலியன அத்தகைய ஐக்யப் பொருள்கள் நிறைந்த உணவுகளாகும்.

இத்தகைய முக்கியமான நைட்ரோஜென் என்னும் வாயு சம்பந்தமாக ஆங்கில விஞ்ஞானிராலே பிரபு பல ஆராய்ச்சிகள் செய்ய நேர்ந்தது. நைட்ரோஜென் காற்றில் கலந்திருப்பதென்று பார்த்தோம். அது பல பிற தனி வஸ்துக்களுடன் சேர்ந்து ஐக்கிய வஸ்துக்களாகவும் காணப்படுகிறது. மாடு சாணி போடுகிறது, மூத்திரம் பெய்கிறது. அவை ஒருவிதமான வாசனை யுடையதாக இருப்பதற்குக் காரணம் நைட்ரோஜென் ஐக்கியப் பொருளான அமோனியா என்னும் வஸ்துவே. நாம் ஜலதோஷம் வராதிருப்பதற்காகப் பாட்டிலில் போட்டு வைத்துக்கொண்டு அடிக்கடி முகருகிறோமே, அந்த வெள்ளை வஸ்துவும் நைட்ரோஜென் ஐக்ய வஸ்துவே. வெடி மருந்து செய்வதில் பிரதானமாக இருப்பதும் நைட்ரோஜென் ஐக்யப் பொருள்களில் ஒன்றே. அக்கினித் திராவகம் என்று சொல்வதும் அத்தகைய பொருள்களில் ஒன்றுதான். இப்படி நைட்ரோஜென் ஐக்யப் பொருள்கள் அநேகம் உள.

நைட்ரோஜென் மட்டும் தனியாக வேண்டுமானால் அதைக் காற்றிலிருந்து பெறலாம். காற்றிலுள்ள அசுத்தங்களையும் பிராண வாயுவையும் நீக்கி விட்டால் எஞ்சி நிற்பது நைட்ரோஜென் வாயு மட்டுமே. நைட்ரோஜெனை அது சேர்ந்துள்ள ஐக்யப் பொருள்களிலிருந்தும் ரஸாயன முறையில் பிரித்து எடுத்துக் கொள்ளலாம்.

எந்த வஸ்துவாயினும், அதை எந்த விதத்தில் பிரித்தெடுத்தாலும் அது எப்பொழுதும் ஒரே விதமான குணம் உடையதாகவே இருக்கும் என்பது யாவரும் அறிந்த விஷயம். பசும் பாலை எந்த மாட்டில் கறந்தாலென்ன, யார் கறந்தாலென்ன, எப்பொழுது கறந்தாலென்ன, பசும் பால் பசும் பாலாகவே தான் இருக்கும். அதே மாதிரி நைட்ரோஜெனைக் காற்றிலிருந்து பிரித்தாலும், ஐக்யப் பொருள்களிலிருந்து பிரித்தாலும் அது ஒரே மாதிரியாகத்தான் இருக்க வேண்டும். இது இயற்கைத் தத்துவம்.

ஆனால், நைட்ரோஜென் இதை மீறுவதாகத் தோன்றிற்று ராலே பிரபுவுக்கு. காற்றிலுள்ள ஆக்ஸிஜெனை நீக்கிவிட்டுப் பெற்ற நைட்ரோஜென் வாயு, அதன் ஐக்கியப் பொருள்களி

லிருந்து பிரித்து எடுத்த நைட்ரோஜென் வாயுவைவிட அதிகக் கனமுடையதாக இருந்தது. அப்படிக் கூடுதலாகவுள்ள கனம் எவ்வளவு? கூடுதல் என்று சாதாரணமான மக்கள் கூற முடியாத அளவு அற்பமாகவே இருந்தது. நம்மைப் போன்றவர்கள் "இது என்ன ஒரு பிரமாதமான வித்தியாசமா? இந்த அற்பமான வித்தியாசத்தைப் பிரமாதப்படுத்தலாமா? இந்த வித்தியாசங்கூட, நைட்ரோஜெனைப் பிரித்து எடுத்ததிலோ அல்லது அதை நிறுத்துவதிலோ ஏற்பட்ட பிழையினால் உண்டாயிருக்கவும் செய்யலாம்" என்று எண்ணி அதை அத்துடன் நிறுத்திவிட்டு வேறு பெரிய ஆராய்ச்சியில் மனத்தைச் செலுத்தி விடுவார்கள்.

ஆனால், ராலே பிரபு விஞ்ஞானி அல்லவா? விஞ்ஞானிக்கு உண்மைதானே பிரதானம். அதைத் துல்லியமாகக் கண்டறிந்தால்தானே அவருடைய மனம் திருப்தி அடையும்? அதனால் அவர் "எவ்வளவு அற்பமான வித்தியாசமாயினும் வித்தியாசம் வித்தியாசம்தான். அத்துடன் அந்த வித்தியாசம் நம்முடைய பிழையினால் ஏற்பட்டதென்றால் அப்படி நாம் செய்த பிழை யாது? அதையேனும் அறிந்து விட வேண்டாமா?" என்று எண்ணலானார். அப்படியே அவர் நிறையில் வித்தியாசம் ஏற்பட்டதன் காரணத்தைக் கண்டறிய ஆராயத் தொடங்கினார்.

முதலில் தாம் நிறுத்தது சரிதானே என்று சந்தேகித்துப் பல முறை நிறுத்து நிறுத்துப் பார்த்தார். அப்பொழுதும் வித்தியாசம் இருந்துகொண்டே வந்தபடியால், துல்லியமாகநிறுக்கக்கூடிய வேறு பல தராசுகளைக்கொண்டு நிறுத்துப் பார்த்தார். அந்த வித்தியாசம் அப்பொழுதும் மறைந்து விடவில்லை.

அதன் மேல், காற்றிலிருந்து பிரித்து எடுத்த நைட்ரோஜெனுடன் ஏதேனும் அழுக்குகள் சேர்ந்திருக்கின்றனவோ, அல்லது ஆக்ஸிஜெனே இன்னும் கொஞ்சம் அத்துடன் கலந்து இருக்கிறதோ என்று சந்தேகித்தார். அதனால், சிறிதுகூட இல்லாமல் ஆக்ஸிஜெனையும் அசுத்தங்களையும் நீக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். அப்போதும் நிறையில் வேறுபாடு காணப்படவே செய்தது.

இது என்ன ஆச்சரியம்? நைட்ரோஜென் என்பதெல்லாம் ஒன்றுதானே, ஒரே மாதிரியான நிறையுடையதாகத்தானே இருக்க வேண்டும்? இந்தமாதிரி வெகு சுத்தமாகப் பிரித்து எடுத்த நைட்ரோஜென் இப்படி நிறை கூடி இருப்பானேன் என்று யோசிக்கலானார். இறுதியில் அவர், ஒருவேளை காற்றிலிருந்து பிரித்து எடுத்த நைட்ரோஜெனுடன் வேறு வாயு எதுவேனும் கலந்திருக்குமோ, நாம் நைட்ரோஜெனைத் தனியாகப் பிரிப்பதற்குக் கையாண்ட முறைகள் எதுவும் அந்த வாயுவை நீக்க முடியாது போயினவோ என்று எண்ணினார்.

அப்படியானால், காற்றிலிருந்து அழுக்கோ, ஆக்ஸிஜெனோ இல்லாமல் பிரித்து எடுத்த நைட்ரோஜென் உள்ள பாத்திரத்திலிருந்து நைட்ரோஜென் முழுவதையும் நீக்கிவிட்டால் ஏதேனும் எஞ்சி நிற்கின்றதா என்று பார்ப்போம் என்று எண்ணினார்.

அப்படியே நைட்ரோஜென் முழுவதையும் நீக்குவதற்கான முறைகளைக் கண்டுபிடித்து, அவற்

றைக் கையாண்டு நைட்ரோஜென் முழுவதையும் நீக்கினர். அதன் பின் நைட்ரோஜென் இருந்த பாத்திரத்தில் ஏதேனும் இருக்கிறதா, நிறுத்துப் பார்ப்போம் என்று நிறுத்துப் பார்த்தார். ஆம், அதில் ஏதோ இருக்கத்தான் செய்கிறது; நிறையும் காட்டவே செய்கிறது. அது நைட்ரோஜெனுகவே இருக்கக் கூடாதா? அப்படியில்லை. அது நைட்ரோஜெனை நீக்குவதற்காக உபயோகித்த உலோகத்துடன் சேர மறுத்துவிட்டது. அந்த உலோகத்துடன் மட்டுமன்று. எந்த உலோகத்துடனுமே சேர மறுத்து விட்டது. இவ்வளவு சோம்பலான வஸ்துவை இதற்கு முன் விஞ்ஞானிகள் யாரும் கண்டதே யில்லை. இந்த வாயு இதுவரை அவர்கள் காணுத ஒரு வஸ்துதான். அப்படியாளுல், அதைத் தனி வஸ்துக்கள் ஜாபிதாவில் சேர்த்துக் கொள்ள வேண்டுமே? அதற்கு என்ன பெயர் கொடுக்கலாம் என்று யோசித்தார்கள். அது எங்கும் காணுத சோம்பலுடையதாக இருந்ததால் அதற்குச் சோம்பேறி வஸ்து என்று பொருள்படக் கூடியதாக "ஆர்கன்" என்று நாமகரணம் செய்தார்கள்.

மனிதர்களில் கால் சோம்பேறி, அரைச் சோம்பேறி, முக்கால் சோம்பேறி, முழுச் சோம்பேறி என்று பல தினுசானவர்கள் உண்டு. அதுபோல் விஞ்ஞானிகள் கூறும் தனி வஸ்துக்களிலும் அந்த விதமான குணங்களுடைய வஸ்துக்கள் உண்டு. நைட்ரோஜெனைக்கூடச் சுறுசுறுப் பில்லாத வஸ்துவென்றே கூறுவார்கள். அது வெகு சில தனி வஸ்துக்களுடனேயே ஐக்கியப்படும் தன்மையுடையது. அதுவும் அதிகமான சூடு உண்டாக்கித், தட்டி எழுப்பிவிடப்பட்டால் தான்.

ஆனுல், அதனுடன் தங்கி, நிறையை வித்தியாசமாகக் காட்டிக்கொண்டிருந்த ஆர்கனே எந்த வஸ்துவுடனும் சேராமல் முழுச் சோம்பேறியாகவே இருக்கும். ஆனுல், இப்படிச் சோம்பேறியா யிருந்தாலும் ராலே பிரபுவும் மற்ற விஞ்ஞானிகளும் தங்கள் தனி வஸ்துக்கள் ஜாபிதாவில் மற்றொரு தனி வஸ்துவைச் சேர்க்கக் கிடைத்து விட்டது குறித்துப் பேரானந்தம் அடைந்தார்கள்.

அதுமட்டு மன்று. "எதுவும் செய்யாமல் கவனித்துக் கொண்டு நிற்பவர்களும் உதவி செய்பவர்களே" என்று மில்டன் என்னும் ஆங்கில மகா கவி கூறுகிருர். அதுபோல் ஆர்கன் வாயு சோம்பேறியா யிருந்தாலும் நமக்குப் பயன் படவே செய்கின்றது. அதைத் தான் மின்சார விளக்குகளில் நிறைத்து வைக்கிருர்கள்.

இப்படி உபயோகமான ஒரு வாயுவை எப்படி ராலே பிரபு கண்டுபிடித்தார்? நிறையில் வித்தியாசம் கண்டதும் அலட்சியமா யிருந்திருந்தால் அதைக் கண்டு பிடித்திருக்க முடியுமா? என்னமோ வித்தியாசம் என்று கவனியாமல் இருந்திருந்தால் அது எத்தனை வருஷங்கட்கு காற்றில் மறைந்துகொண் டிருந்திருக்குமோ, யார் அறிவார்? ஆனுல் இயற்கை எத்தனை மெல்லிய குரலில் எதைச் சொன்னுலும் அதைச் செவிமடுப்பதே விஞ்ஞானிகளின் லட்சணம். அந்த லட்சணம் உள்ளவர் தான் உண்மையைக் கண்டறிவார்.



# இலங்கையும் இந்தியாவும்

எஸ். பியாம்சுந்தர் ராஜரத்னம்

பழைய அரசாங்க நிர்வாகங்கள் அடிமை நாடுகளிலிருந்து மெதுவாக அகல்வதைக் காண்கிறோம். அன்னிய ஆதிக்கத்தின்கீழ் அவஸ்தைப்பட்ட நாடுகள் விடுதலைக்காகவும் சுதந்தரத்திற்காகவும் போராடுகின்றன. சில நாடுகள் பூரண சுதந்தரம் வேண்டுமென்றும், சில நாடுகள் குடிநாட்டு அந்தஸ்து வேண்டுமென்றும் முழங்கியதனால், இங்கிலாந்திலிருந்து கல்விமான்கள் சிலர் சோல்பெரி கமிஷன் என்ற பெயருடன் இலங்கைக்கும் அனுப்பப்பட்டனர். இவர்கள் தங்கள் அறிவுக்கெட்டிய தூரம் நாட்டின் நலத்திற்காகவும், தங்கள் சுரண்டுதலுக்காகவும் புது அரசாட்சி முறைகளைத் தெரிவித்தனர். அம்முறைகள் எவ்வளவு தூரம் இலங்கையை இலங்க வைக்கும் என்பதும், எவ்வளவு தூரம் ஆட்சி முறையை எளிமைப்படுத்தும் என்பதும் கருதற்பாலது.

அரசாங்கம் தீர்மானித்து விட்டால் எதுதான் நிறைவேறாது? நஞ்சும் அமிர்தமாகிவிடுமல்லவா? இலங்கை அரசாங்க சபை இதை ஒப்புக்கொண்டு விட்டபடியால், மே மாதம் ஏழாந்தேதியன்று பிரிட்டிஷ் பார்லிமெண்டில், மன்னர் அனுமதியுடன் இலங்கைக்காகப் புது அரசாங்கச் சட்டம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. பார்லிமெண்டு, பிரதிநிதிகள் சபை, மேல் சபை, மந்திரி சபை, பிரதம மந்திரி என்ற பதங்கள் காணப்படுகின்றன; தற்சமயம் இருக்கும் ஸ்டேட் கவுன்சிலுக்குப் பதிலாகப் பார்லமெண்டு ஏற்படுத்தப்படும். பிரதிநிதிகள் சபை, மேல் சபை என்ற இரு பிரிவும் சேர்ந்ததுதான் பார்லமெண்டு. மாகாணங்களிலிருந்து பிரதிநிதிகள் சபைக்குப் பிரதிநிதிகள் தேர்தல் செய்யப்படுவார்கள். 15 பேர் கவர்னராலும், 15 பேர் பார்லமெண்டாலும் மேல் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவர். இவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து உள்நாட்டுச் சீர்திருத்தத்திற்காகவும், அமைதிக்காகவு மட்டுமே சட்டம் ஏற்படுத்த முடியும். அன்னிய நாட்டு உறவு, தற்காப்பு முதலியன இங்கிலாந்தால் மட்டுமே பரிபாலிக்கப்படும். எக்காரணம் பற்றியும் இலங்கை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து பிரிய முடியாது. அரசாங்க நிர்வாகத்தைப் பொறுத்த விஷயங்களில் சட்டம் வகுக்கவோ, மாற்றவோ இலங்கையரால் முடியாது. சிறுபான்மையோரும், மதங்களும் காப்பாற்றப்படுமென்றும், ஒரு தீங்கும் விளையாதென்றும் வாக்களிக்கப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் மந்திரிசபை போன்ற மந்திரிகளின் குழுவும் பிரதம மந்திரியாரின் தலைமையில் ஸ்தாபிக்கப்படும்.

இதிலிருந்து என்ன வெளியாகிறது? இலங்கைக்குப் பூரண சுதந்தரம் கிடைத்துவிட்டதா? இலங்கையர் விரும்பிய உரிமைகளும், விடுதலையும் இவ்வளவு தானா? நன்கு ஆராய்ந்து பார்க்

இலங்கையில் இந்தியரின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகி வருவதைக் காணப் பொறாமல், உணர்ச்சி வேகத்தோடு இதனை எழுதியிருக்கிறார் கட்டுரையாளர். இவர், கண்டியில் உள்ள மகாத்மா காந்திக் கல்லூரியின் தலைவர்.

கும் ஒருவராகிலும் இதுதான் தங்களுக்கு வேண்டிய இன்றியமையாத் திட்டம் என்று இதை ஏற்றுக்கொள்ள மாட்டாரானலும், இன்று சில பிரபல மந்திரிகளும், தலைவர்களும் இதைப் போற்றிப் புகழ்வதில் ஏதோ ஒரு சூழ்ச்சி இருக்கிறதென்பது புலனாகும். பெரும்பான்மையோரான சிங்கள ஜாதியைச் சேர்ந்த இம் மந்திரிமார்கள் இலங்கையைச் சிங்களவர் நாடாக்க இதுதான் தருணம் என்று குதூகலிக்கின்றனர் போலும்.

இலங்கையில் சிங்களவர், யாழ்ப்பாணத் தமிழர், இந்தியத் தமிழர், முஸ்லிம், பறங்கி முதலிய ஜாதியினர் இருக்கின்றனர். இவர்களில் 9½ லட்சம் இந்தியரே இலங்கையைச் சுவர்க்கப் பூமியாக்கியவர்கள் என்பதை எவரும் மறுக்க முடியாது. பெரும்பான்மையான இந்தியர் தேயிலைத் தோட்டங்களிலும், ரப்பர்த் தோட்டங்களிலும் வேலைசெய்து, பெரும் லாபத்தைமுதலாளிகளுக்கும், அரசாங்கத்திற்கும் அளிக்கின்றனர். சிலர் வியாபாரத்திலும், சிலர் நகரங்களில் தெருக் கூட்டுவதிலும், சிலர் கூலிவேலை செய்வதிலும் ஈடுபட்டிருக்கின்றனர். இவர்கள் எல்லோரும் இந்தியர்கள் என்று சொல்லிக்கொண்ட போதிலும், பெரும்பான்மையோர் இலங்கை மக்களே ஆவர். இவர்களுக்கு இந்தியாவில், வீடு வாசல் கிடையாது. இனத்தார் இல்லை. பாட்டன், முப்பாட்டன் முதலியோர் இலங்கையிலேயே பிறந்தவர்கள். ஆனால், இவ் விந்தியரின் எதிர்கால நிலை என்னவென்று ஒவ்வொரு இந்தியனும் முழுமனதுடன் கவனிக்க வேண்டும்.

கொஞ்சக் காலமாக இலங்கை இந்தியாவுடன் கொண்டுள்ள உறவு நல்லபடியாயிருப்பதாகத் தோன்றவில்லை. எவ்விதத்திலும் இந்தியாவை அவமானப்படுத்த வேண்டும் என்பது சில இலங்கையரின் எண்ணம் போலும். உணவு, உடை முதலிய இன்றியமையாப் பொருள்கள் எல்லாம் இந்தியா கொடுத்து உதவ வேண்டுமாம்; ஆனாலும், இலங்கை, இந்தியரைத் துன்புறுத்துவதுடன், 40 கோடி மக்களையுடைய பாரத நாட்டைப் பணிப்பெண் போல் நடத்துமாம். மாமியார் மருமகள் கதைபோல் இருக்கிறது இலங்கையின் நடத்தை.

முதலாவது, இந்தியாதான் வியாதியின் இல்லிடமென்று கருதப்படுகிறது. இந்தியாவிலிருந்து எவரேனும் இலங்கைக்குச் செல்ல வேண்டுமானால், மண்டபம் முகாமில் பல அவஸ்தைகளுக்காளாக வேண்டும். இலங்கை அரசாங்கத்தால் நடத்தப்படும் இம் மருத்துவச் சிறை ஒரு நரகப் படுகுழி என்று கூறுவது மிகையாகாது. நரகத்தில் கஷ்டப்பட வேண்டுமென்றால், மண்டபத்தில் மண்டியிட்டு மன்றாடி மருத்துவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணி வேதனைப்படுவதுடன், இலங்கை சென்றும் பல நாட்கள்வரை டாக்டர்மார்களைத் தரிசனம் பண்ணிவரவேண்டியிருக்கிறது. இந்த மண்டப முகாம் உடனே ஒழிய வேண்டுமென்று ஒவ்வொருவரும் உறுதி கொள்ள வேண்டும். இது, இந்தியாவின் சிறப்புக்கு ஒரு பங்கம், இந்தியரின் கௌரவத்துக்கு ஓர் அபகேடு, மனிதரை மந்தையாக்கும் மாசு.

இந்தியரைத் தூசு என்றே சில சிங்கள மந்திரிகள் மதிக்கின்றனர். இதற்கு அவர்களின் கர்வ

மும், இலங்கையைச் சிங்களவருக்கு மட்டுமே சொந்தமாக்க வேண்டுமென்ற குதர்க்க எண்ணமுமே காரணமாகும். நேவ்ஸ்மீர் என்ற தேயிலைத் தோட்டத்தின் 400 இந்தியத் தொழிலாளிகளும் அந்த தோட்டத்தைவிட்டுப் போக வேண்டுமென்று அரசாங்கம் கட்டளை இட்டது. சொத்தில்லாத ஏழை இலங்கையருக்கு அதைப் பங்கு போட்டுக் கொடுத்துவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் அந்தத் தோட்டத்தை அரசாங்கம் விலைக்கு வாங்கி யிருக்கிறது. இவ்விடத்தில் இருக்கும் சில இந்தியர்கள் 50 வருஷங்களாக இங்கேயே இருந்து வருவதால், அவர்களுக்கும் ஒரு பங்கு கொடுக்க வேண்டு மென்று கேட்டதுடன், அவர்கள் விண்ணப்பத்தை அங்கீகரிக்காவிடில் அவ்விடத்திலிருந்து போவதில்லை என்றும் தீர்மானித்தனர். அரசாங்கமோ அவர்களைத் தண்டிக்கத் தீர்மானித்துவிட்டது. இத் துறையில் இலங்கை அரசாங்கம் இந்தியருக்குத் துரோகம் செய்கிற தென்பதை எளிதில் அறியலாம்.

இவ் விஷயத்தைப் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு இந்தியர்கள் தெரிவித்தனர். உடனே, நேருஜீ இலங்கையின் பிரதம மந்திரி டி. எஸ். சேனநாயகாவுக்கு "அநீதியான ஆதிக்கத்தை அகற்றி விடுங்கள்" என்று தந்தி மூலம் அறிவித்தார். அதற்குச் சேனநாயகா, இலங்கை அரசாங்கத்தின் நடத்தை எப்பொழுதும் போல் இருக்கிறதென்றும், இந்தியருக்கு விரோதமாக ஒன்றும் நடக்கவில்லை என்றும் பதிலளித்திருக்கிறார். ஆம்; இதிலும் உண்மை முற்றிலும் பிரதிபலிக்கின்றது. இலங்கை அரசாங்கத்தின் நடவடிக்கை மாற வில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இலங்கைவாழ் இந்தியரைத் துரத்திவிட வேண்டும், அவர்களுக்கு ஒரு உரிமையும் கொடுக்கக் கூடாது என்ற நோக்கம் சேனநாயகா போன்ற கிணற்றுத் தவளை மந்திரிமாரின் உள்ளக் கிடக்கை என்றும் நன்கு தெரிய வருகிறது. இதன் காரணமாக இந்தியர், ஹர்த்தாலையும் வேலை நிறுத்தத்தையும் கையாள நேர்ந்தது. இருந்தும், மந்திரிமாரின் மதி மயக்கத்திற்கு இன்னும் மருந்து கிட்டவில்லைபோலும்.

இன்று, இலங்கையர் என்றதும் சிங்களவரா என்று கேட்கும் நிலைமை பிறந்திருக்கிறது. நேவ்ஸ்மீர் தோட்ட விஷயத்தில் ஏழைத் தொழிலாளர்மேல் குற்றம் சுமத்தப்பட்டு, நியாயஸ்தலத்தில் வழக்கு விசாரணைக்கு வந்த போது, அரசாங்க வக்கீல் கேட்ட கேள்விகள் விசித்திரமானவை. அவர்கள் ஏன் தோட்டத்தை விட்டுப் போக மறுத்தார்கள் என்று கேட்க, அவர்களுடைய பாட்டன், முப்பாட்டன் முதலியோர் அதே இடத்தில் பிறந்து வளர்ந்ததால் அவர்களும் அங்கேயே இருக்க விரும்புவதாகப் பதில் அளித்தனர். "அப்படியானால், நீங்கள் சிங்களவர்களா?" என்ற ஆச்சரியமான கேள்வி அரசாங்க வக்கீலிடமிருந்து பிறந்தது.

இது ஏதோ நாவின் தடுமாற்றம் என்று வைத்துக் கொண்டாலும், கலுத்துறையில் சேனநாயகா இயற்றிய சொற்பொழிவை ஒரு விதத்திலும் தவறுதலாகப் பிறந்த வார்த்தை என்று ஒப்புக்கொள்ளமுடியாது. அவர், இந்தியர் சம உரிமை வேண்டுவதாயும், அவ்வுரிமையை

அவர்களுக்கு அளிக்க முடியாதெனவும், இலங்கையை விட்டு இந்தியர் வெளியேற வேண்டுமெனவும் அறிவற்று, ஆவேசத்துடன் அலறியது வெறுக்கத் தக்கதே.

இந்தியர்கள் இவ்விதம் கேவலஸ்திதியில் இருந்து அவஸ்தைப் படுவதற்கு, இந்தியர்களிடையே பல ஊழல்களிருக்கின்றன. அவர்கள் பணத்தைப் பெரிதெனக் கருதுகிறார்களே தவிர, கல்வி, சமுதாயத் தொண்டு முதலிய துறைகளில் கவனம் செலுத்துவதில்லை. "இலங்கை இந்தியக் காங்கிரஸ்" இந்தியர் என்ற பெயருடன் புகழுடைந்து வருவதனால் ஒரு பயனும் இல்லை. காங்கிரஸ் என்ற கௌரவப் பெயரில் ஏழைப் பாமர மக்களை ஏமாற்றி இன்னமுதுண்ணும் கோழையர் கூட்டம் கும்மாளம் போடுகிறது. இவர்கள் ஒவ்வொருவரும் சமீபத்தில் வரப்போகும் தேர்தலில் போட்டியிட்டுச் சட்டசபை அங்கத்தினர் ஆக வேண்டும் என்ற நோக்கத்துடன் பலவாறாகப் பல்லவி பாடுவதால், இந்தியருக்கெல்லாம் அகௌரவம் ஏற்பட்டிருக்கிறது. சரியான தலைவர் இல்லை. இலங்கைவாழ் இந்தியரான 9½ லட்சம் பாரத மக்களை ஒன்றுபடுத்தி, போர் புரிந்து வெற்றி பெற வேண்டும் என்ற எண்ணம் காங்கிரஸ் அதிகாரிகளுக்கு வெறுப்பாகத் தோன்றுகிறது. ஏனெனில், இவர்களிலும் சிறந்தவர்கள் முன்வந்துவிட்டால், இவர்கள் எவ்விதம் சட்ட சபைக்குச் செல்ல முடியும்? இவ்விதம் தன்னலம் கருதுவதால், இந்தியரின் நிலை வருந்தத் தக்கதாக இருக்கிறது. இந்தியாவிலுள்ள தலைவர்கள் இலங்கை இந்தியக் காங்கிரஸ் கண்ணியமான முறையில் நடந்து வரும்படி தூண்டி, வழி காட்டி, நல் வழிப்படுத்தினாலன்றி இந்தியருக்கு விமோசனம் இல்லை.

என்னவிருந்தபோதிலும், இந்தியத் தாயின் காலடியில் சரண்புக வேண்டிய காலம் இலங்கைக்கும் நெருங்கிவிட்டது. சுதந்தர இந்தியா சும்மா துயில்கொண்டிருக்கும் நாள் ஆங்கில ஏகாதிபத்தியத்தின் தகனக் கிரியையுடன் முடிவு பெறும்; அப்பொழுது, உலகெங்கும் இந்தியாவின் புகழ் பறந்து செல்லும்; நாடுகள் நம்முடன் நட்புக்கொள்ளக் கங்கணம் கட்டிக்கொண்டு நிற்கும்; அன்னியர் பய பக்தியுடன் பணிந்து நிற்பர்; இலங்கை மட்டும் தனியே என்ன செய்யும்? இந்தியர் வெளியேற வேண்டும் என்று சேனநாயகா சங்கொலிக்கவும், அவருடைய சகாக்கள் அதற்குச் சேகண்டி அடிக்கவுமா போகிறார்கள்? குறுகிய மனதுடைய இலங்கை நாட்டு நாயகனே, ஆழ்ந்து யோசனை செய். கடவுள் உனக்கும் உன் நாட்டு மக்களுக்கும் நல்லறிவு புகட்டுவானாக!



## குதிரைப் பந்தயம்

குதிரைப் பந்தயத்திற்காக விசேஷ ரயில் வண்டிகள் விடுகிறார்கள். காந்தித் தொப்பி வைத்துக்கொண்டு, காங்கிரஸ்காரர் என்று சொல்லிக் கொள்பவர்களும் அங்கே சென்று, பணத்தைப் பாழாக்குகிறார்கள். இந்தப் பணம் எங்கிருந்து வருகிறது? இப்பொழுது பொதுஜன ஆதரவுள்ள மந்திரி சபைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகளும்கூட இந்தத் தீமையை ஒழிக்காமல், சும்மாப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

—காந்திஜி

# பம்பாயில்

●

மஞ்சேரி எஸ். ஈச்வரன்

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்பதற்கு நிதர்சன உதாரணமாக விளங்குகிறான், இந்தக் கதாநாயகன். அவன் சொல்லும் கதையோ நித்ய யௌவனம் வாய்ந்த, அற்புதமான சோக கீதம். நடு நடுவிலே குமிழி யிடும் நகைச் சுவை கதையுடே இழை யோடா விட்டால்..............

இது பம்பாயில் நடந்தது.

மிக்க நம்பிக்கையாய் உழைத்து வந்த என் 'கில்லட்' க்ஷவரக் கத்தி தற்காலிகமாகக் கெட்டுப் போய்விட்டது. என் தகப்பனாரின் சகோதரர் அதை என் மூத்த தமையனுக்கு நன்கொடையாக அளித்திருந்தார். எனக்கு க்ஷவரம் செய்து கொள்ளும் வயது வந்தவுடன், அதை அவர் எனக்குக் கொடுத்துவிட்டார். அழகு வாய்ந்த பொருள் அது. வெகு வேகமாகப் பழுதடைந்துகொண்டு வந்த போதிலும், என்றைக்கும் வைத்துக் கொண்டு மகிழக் கூடிய வஸ்து. ஆரம்பக் காலத்திய 'கிங் ஸி கில்லட், டக்கவே' ரகத்தைச் சேர்ந்த அது, வெள்ளி முலாம் பூசப்பட்டிருந்தது. உள்ளே முழுவதும் நீல வெல்வெட்டுத் தைத்து, வெள்ளி முலாம் பூசியிருந்த சிறிய பெட்டியும் அதற்கு இருந்தது. கைப் பிடி, தனித்தனியே பிரித் தெடுக்கக் கூடிய தலைப் பாகம், பகட்டான பதிவு அறையில் சொகுசாக அமர்ந் திருக்கும் கையிருப்புக் கத்திகள்—எல்லாவற்றையும், வேண்டு மென்னும் போது, ஒரு நொடியில் சேர்த்துத் தயார் செய்துகொண்டு விடலாம்.

'கில்லட்' கத்திகளினால் க்ஷவரம் செய்து கொள்ளும்போது தான் மனிதர்களின் மூளைகளில் பெரிய பெரிய கருத்துக்க ளெல்லாம் உதய மாகின்றன என்று ஒரு விளம்பரம் கூறுவது உண்மையானால், கடந்த பத்து வருஷக் காலத்தில் என்னிடம் அம் மாதிரிக் கருத்துக்கள் எவ்வளவோ இருந்திருக்க வேண்டும். ஆனால், உலகத்தில், குப்பையில் தூக்கி எறியக்கூடிய அளவுக்குப் பெரிய கருத்துக்கள் அதிகமாகி விட்டதால், நான் என்னுடையவைகளைப் பிரசுரிக்காமல் நிறுத்திவைத் திருக்கிறேன்.

மயிர் வெட்டிக் கொள்வதற் கன்றி வேறு எதற்காகவும க்ஷவரக் கடைகளுக்குச் செல்வது எனக்குப் பிடிக்காது. கத்தி வெட்டுக் காயம் செய்து, விஷத்தை ஏற்றிவிடுவதில் மிகப் பிரசித்தமான இந்த 'சலூன்'களிடம் எனக்கு எமபயம். ஆனால், என் நம்பிக்கை மிக்க 'கில்லட்' தற்காலிகமாகக் கெட்டுப் போய்விட்டது ; ஒரு நாள், கொதிக்கும் தண்ணீரி லிருந்து வெளியே எடுக்கும்போது, தற்செயலாக அதைத் தவற விட்டு விடவே, அதன் இடுக்குப் பற்களில் ஒன்று வளைந்து போய் விட்டது. 'ரிப்பேர்' செய்யக் கொடுத்திருந்த ஆசாமிக்கோ, அதைச் சரி செய்ய ஒரு வாரம் பிடித்தது; இந்த இடைக் காலத்தில், முகத்தில் பயங்கரமான தாடி மீசைகளுடன் என்னால் வெளியே கிளம்ப முடியவில்லை. பிடில் வாசிப்பவனின் மணிக் கட்டைப் போல 'சேப்டி ரேஸ'ரில் பழக்கப்பட்டிருந்த என் கை, சாதாரண 'ரேஸ'ரைத் தொட்டதும் விறைத்துப் போயிற்று. ஆகவே, ஒரே ஒரு தடவை, எத்தனையோ வருஷங்களாக மதக்

கடமையைப் போன்ற முக்கியத்துவத்தைப் பெற்றிருந்த பழக்கத்தை மீறிக்கொண்டு, ஒரு க்ஷவரக் கடைக்கு முக க்ஷவரம் செய்து கொள்ளுவதற்காகச் சென்றேன். ஒருகால், பழக்க வழக்கங்கள், எவ்வளவு பெரிய மதாசாரங்களாக இருந்தாலும், கடவுளின் ஆணைக்கு முன் என்ருவது ஒரு நாள் தலை வணங்கும் படித்தான் ஆகிவிடும் போலும்!

அது, லாமிங்டன் சாலையிலுள்ள 'மகுடம்'—ஒரு சாதாரண மயிர் வெட்டும் கடைக்குச் சற்று ஆடம்பரமான பெயர் தான்! அப்பொழுது நடுப் பகல் கடந்து சிறிது நேரம் ஆகிவிட்ட படியால்,களைத் திருந்த அவயவங்களுக்கு உயிர் கொடுக்க, பக்கத்தி லிருந்த இரானி சாப்பாட்டுக் கடை யொன்றில் ஒரு 'கப்' தேனீரும் ஒரு பட்சணத் துண்டும் சாப்பிட்டேன்; நடுக் கோடை காலத்திய அந்த வெயிலின் உஷ்ணம், பம்பாயின் பிரம்மாண்டமான கட்டிடங்களின் இரும்பையும், சிமிட்டியையும் சுட்டு நீருக்கிவிடக் கூடியதாக இருந்தது. தலையை ஆட்டி, புன் சிரிப்புச் சிரித்து வாடிக்கைக் காரர்களைப் 'பிடிப்பதற்கு,' வெளியே பையன் எவனும் இல்லை. தள்ளு கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தேன். அந்தக் கதவுகளில் பதிக்கப்பட்டிருந்த தடித்த கண்ணுடிகளில், இரண்டு மகுடங்கள் நல்ல சிவப்பு நிறத்தில் அலங்காரமாகத் தீட்டப்பட் டிருந்தன. உள்ளே ஒரே அமர்க்களமாக இருக்கும் என நான் எதிர்பார்த் திருந்தேன். ஆனல், எல்லாம் அமைதியாக இருந்தன. அரை டஜன் காலி நாற்காலிகள், பிரஷ்கள், க்ஷவரக் கத்திகள், சோப்புப் பெட்டிகள், 'டால்கம்' பொடி டப்பாக்கள், பொடி அப்பும் பஞ்சுகள், நீர் விசிறும் குப்பிகள், விலை யுயர்ந்த தலைமயிர்த் தைலங்கள் எல்லாம் அவையவைகளுக்கு உரிய ஒழுங்கான இருப்பிடங்களில் வைக்கப்பட் டிருந்தன. சுவரி லிருந்த பெரிய நிலைக் கண்ணுடிகள் அவைகளின் ஆழ்ந்த ஆமைதியை இன்னும் அதிகரித்துக் காட்டின. கண்ணுடிகளும், சலவைக் கல்லும் பளபளத்தன. பல க்ஷவரக் கடைகளை வேசியின் படுக்கை யறை போல் ஆக்கிவிடக் கூடிய, கண்ணை உறுத்தும் ஆபாசப் படங்கள் அங்கு இல்லை. இவைகளெல்லாமாகச் சேர்ந்து, மற்ற க்ஷவரக் கடைகளி னின்றும் 'மகுடத்'தைத் தனித்து அலாதிச் சிறப்புடன் விளங்கி நிற்கச் செய்தன.

இதைக் கண்டதும் நான் மகிழ்ந்தேன்; என்ருலும், ஒரு நிமிஷம் ஒரு முடிவும் செய்யாமல் நின்றேன்; ஏனெனில், அந்த அறையில் உயி ருள்ள ஜந்து எதுவுமே நடமாடுவதாகத் தெரியவில்லை. நான் திரும்பிப் போக விருந்த தருணத்தில், எனக்குச் சில கஜ தூரத்துக்கு முன் இருந்த ஒரு நகரும் திரைச் சீலைக்குப் பின்னிருந்து ஒரு மனிதன் வெளிப்பட்டு, நாற்காலியில் உட்காரும்படிக் கேட்டுக் கொண்டான்.

"பசங்க ளெல்லாம் பகல் சாப்பாட்டுக்காகப் போயிருக்கிருர்கள். உங்களுக்கு ஒன்றும் அவசர மில்லை யென்று நினைக்கிறேன்" என்ருன் அவன்.

"முக்கியமாக ஒன்றுமில்லை" என்று பதில் அளித்தேன். மேற் கொண்டு தவக்கம் செய்யாமல் அவனும், பிரியும்போது சகடை மாதிரி சப்தம் செய்த, ஒரு

தோல் பட்டையை எடுத்துக் கொண்டு, கத்தியை அதில் தீட்ட ஆரம்பித்தான். 'சட் பட்'டென்ற சப்தத்துடன் கத்தி தோல் பட்டையின் மேல் ஓடிற்று. முதுகுப் புறம் எனக்குத் தெரியுமாறு அவன் நின்றுகொண் டிருந்த பொழுது, அவனை மதிப்பிடக் கூடிய விதத்தில் பார்வையிடச் சந்தர்ப்பம் வாய்த்தது.

நல்ல மதிப்பு விழக் கூடிய தோற்றம் அவனுக்கு இருந்தது. லட்சணம், நடுத்தர வயது, சற்றுப் பருத் திருந்த உடலமைப்பு, விசித்திர நிறம் படைத்த அழகு எல்லாமாக, நாவிதன் என்று சொல்லுவதைக் காட்டிலும் பண வேல்வார தேவி செய்பவன் என்று சொல்வதுதான் பொருந்தும் என்னும்படி அவன் இருந்தான். காலோடு தலை வெகு கணக்காக 'இஸ்திரி' செய்யப்பட் டிருந்த சராயும், 'காலர்' ஒதுக்கினாற் போல் தள்ளப்பட் டிருந்த கையில்லாத வெள்ளைச் சட்டையும் வெள்ளைக் கித்தான் செருப்புகளும் அணிந் திருந்தான். அவனுடைய அசைவுகளில் ஒரு ஒயில் இருந்தது. அவன் என்னுடன் பேசிய சொற்ப ஆங்கிலப் பதங்கள் அவனுடைய தப்புக் கண்டுபிடிக்க முடியாத பண்பாட்டை எடுத்துக் காட்டின. நிச்சயமாக, அவன்தான் அந்தக் கடையின் முதலாளியாக இருக்க வேண்டும்; மிக அழுத்தமான ஆசாமி. ஒருகால், அவனுடைய தொழிலில் அவன் ஒரு 'கலைஞ'ஞகவும் இருக்கலாம். அதிருக்கட்டும். இந்த நாவிதர்களுக்கு இவ்வளவு பண்பாடும், நாசூக்கும் எப்போது வந்தது?

கையில் இலேசாகக் கத்தியைப் பிடித்தவாறு ஒரு புன்சிரிப்புடன் திரும்பினான். அவன் சொரூபம் வெளியாயிற்று. அவனுடைய புன்சிரிப்பு எனக்குச் சிறிது விசித்திரமாகவே பட்டது. அது அவனுடைய முகத்திற்கு மகத்தான கருணை பாவததையோ, நம் தயவைப் பெறக் கூடியதன்மையையோ, கொண்டு வர வில்லை. முகம் முழுவதும் கண்களில் ஒருமித்துப்போய் ஒரு பளபளப்பு ஜொலித்தது அதில். என் வயிற்றின் நடுப் பாகத்தில் ஏதோ ஒன்று தகித்தது; முதுகு நரம்புகளின் அடிப் பாகம் சில் லிட்டுப் போயிற்று. ஆனாலும், தைரியத்தை இழுத்துப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தேன்.

என்மேல் ஒரு துண்டைச் சுற்றிப் போர்த்தினான். பிறகு, நாற்காலியின் அடிப் பாகத்தை இழுத்துவிட்டு, முதுகுப் பக்கத்திலிருந்த சாய்வுக் கட்டையை மேலே தூக்கி, அதன்மேல் என் தலையைச் சாய்த்து அமுக்கிக் கிட்டத்தட்ட என்னைப் படுக்கை நிலையில் இருத்திவிட்டான். ஒரு தாவுத் தாவி என் மார்பின்மேல் காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்காரப் போகிறானா, என்ன? இல்லை, அதற்குள்ளாக இருக்காது.

முகத்தில் சோப்பைத் தடவியவாறு, "நீங்கள் தெற்கத்திக் காரரா?" என்று கேட்டான். கேள்வி திடுதிப்பென்று இருக்கக் கூடாது என்ற எண்ணத்தில், குரலையும் சிறிது தணித்துக் கொண்டான். "பம்பாயில் ஏதாவது வேலையில் இருக்கிறீர்களாக்கும்?"

இன்னும் கொஞ்சம் மிருதுவான மயிர்க் காம்புகள் இருக்கும் 'பிரஷ்' ஆகப் பார்த்து அவன் உபயோகித் திருக்கலாம் என்று எனக்குப் பட்டது. "வேலையில் இல்லை. பட்டணத்தைப் பார்ப்பதற்காகச்


RM. MUTHIAH
ARTIST

சும்மா வந்தவன்தான்" என்று பதில் சொன்னேன்.

"ஓஹோ! பம்பாயில் மதராஸிகள் ரொம்பப் பேர் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் ரொம்பக் கெட்டிக்காரர்கள்; நல்ல புத்திசாலிகள்". லார்ட் கர்ஸானின் புகழுரைக்குச் சமமானது அது!

"நீ இந்தியாவில் எந்தப் பக்கத்தைச் சேர்ந்தவன்?" என்று நான் கேட்டேன்.

"அது பெரிய கதை" என்று சொல்லிவிட்டு, மிகச் சுறுசுறுப்புடன் மூன்றாம் முறையாக முகத்தில் சோப்பைத் தேய்த்துத் தடவிக்கொண்டு போனான்.

"சுருக்கமாகச் சொல்லுவது தானே?"—ஏதோ ஒரு பைசாச ஆவல் என்னைப் பிடித்தது.

ஒரு நிமிஷ நேரம் ஆழ்ந்த நிசப்தம் நிலவிற்று. யுத்த நிறுத்த தினத்தன்று சம்பிரதாயமாக அனுஷ்டிக்கப்படும் இரண்டு நிமிஷ நேர நிசப்தத்தைக் காட்டிலும் ஆழ்ந்திருந்தது இது.

"நான் ராஜமஹேந்திர்புரத்தைச் சேர்ந்தவன்."

"தெலுங்கனா!" அவனுடைய குற்றமற்ற ஆங்கிலத்தைக் கண்டு நான் பிரமித்துப் போய்விட்டேன். இங்கே ஏதோ ஒரு தவறு இருக்கிறது; ஒரு அற்புதமாகக்கூட இருக்கலாம். அதில் நுழைந்து பார்க்க வேண்டும் என்ற ஒரு உணர்ச்சியும் கிளம்பிற்று.

சோப்புப் பிரஷைக் கீழே வைத்துவிட்டுக் கத்தியை எடுத்துக்கொண்டு வெகு வேகமாக உள்ளங்கையில் திருப்பித் திருப்பித் தீட்ட ஆரம்பித்தான். நிமிர்ந்து பார்த்த நான், அவன் கண்களில் கெட்டிப்பட்டு மின்னிய ஒளி வேகத்தைக் கண்டு நடுங்கிப் போனேன்.

அவன் பேச ஆரம்பித்தான்; கூடவே, அவனுடைய கூர்மையான கத்தியும், முதன் முறையாக என் கன்னத்தில் கரகர வென்று ஓட ஆரம்பித்ததை நான் உணர்ந்தேன்.

"நான் இருபத்து நான்கு வயதுள்ள இளைஞனாயிருந்தபோதே ராஜமஹேந்திரபுரத்தை விட்டு வெளியேறிவிட்டேன். மூன்று வருஷக் காலத்திற்கு வட இந்தியா முழுமையும் பிரயாணஞ் செய்தேன். முக்கியத்துவம் வாய்ந்த ஒவ்வொரு நகரத்தையும் சென்று பார்த்தேன். எல்லா விதமான வேலைகளிலும் இருந்து பார்த்தேன். சிக்கனமான பரம்பரையில் பிறந்து வளர்ந்தவனாதலால் மிகக் கவனமான வாழ்க்கை நடத்தி, பணமும் சிறிது அதிகமாகவே சேர்த்தேன். கடைசியாக நான் இருந்த இடம் குவெட்டா. அங்கே வருஷத்துக்கு வருஷம், என் சுபிட்சநிலை பெருகிக்கொண்டே போயிற்று. சேனைகளுக்குச் சாமான்கள் வினியோகிக்கும் குத்தகைதாரர் பதவிக்கும் வந்தேன்—"

அவன் மொட்டையாக நிறுத்திவிட்டான். என் மேல் உதட்டையும், முகவாய்க்கட்டையையும் க்ஷவரம் செய்துவிட்டபடியால், என்னால் தாராளமாகப் பேச முடிந்தது. அவன் முகம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்ததைக் கண்டேன். அவன் மேலே தொடர்ந்து சொல்லுவதில் எனக்குள்ள அக்கரையைக் காட்டுவதற்காக 'ஊம்' என்றேன்.

"வெளியே யிருந்த காலம் முழுவதும், நான் ஊரிலுள்ள

என் பெற்றோர்களுக்குக் கடிதம் எழுதவே யில்லை. என்றாவது ஒரு நாள் திடீரென்று அவர்கள் முன் தோன்றி, என் சம்பாத்தியங் களை அவர்கள் காலடியில் கொட்டி, என் தாயாரை அவ ளுடைய ஒரே பிள்ளைக்கு ஒரு சின்னப் பெண்டாட்டியைத் தேடிக் கொடுக்கும்படிக் கேட்டு அவர்களை ஒரே ஆச்சரியத்தில் ஆழ்த்த வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். ஏனென்றால் நான் இப்பொழுது நல்ல வாழ்க்கை முறையை ஏற்படுத் திக் கொண்டு விட்டேன்—''

அவன் பேசிக்கொண் டிருந்த பொழுது, சரசரவென்று க்ஷவரக் கத்தி என் வலது கன்னத்தில் நகர்ந்தது.

"ஆனால் நான் ரொம்பத் தாமதித்து விட்டேன். நான் வீட்டை விட்டு வந்த இரண்டு வருஷங்களுக்குப் பிறகு அவர் கள் காலமாகி விட்டார்கள். என் தாயார், தகப்பனாரை முந்திக் கொண்டுவிட்டாள். நான் தன் னந் தனியன் ஆனேன். இந்தப் பரந்த உலகத்தில், நான் தனித்து நின்றேன். ஆனால், மேற்கொண்டு எப்படியாவது நான் வாழ்க்கை நடத்திச் செல்லத்தான் வேண் டும். என் பெற்றோர்களின் வீட் டில் வசித்து வந்த என் ஏழை மருமகளை மேலும் வசித்து வர அனுமதித்தேன். என்னுடைய தாராளத்திற்கு அவள் நன்றி செலுத்தினாள். பின்னர் ஏதோ ஒரு வேகத்தில், ஒருவிதச் சிக்க லும் இல்லா திருந்த அந்தச் சொத்தை அவளுக்கே மாற்றி விட்டேன். பிறகு, கல்யாணம் செய்துகொண்டு, என் இளம் மனைவியுடன் குவெட்டாவுக்குத் திரும்பினேன்—''

அவன் அரைகுறையாக நிறுத்தினான். உணர்ச்சி வேகத் தில் அலையுண்டவாறு அவன் பேசி வருவதை நான் நன்றாகக் கவனிக்க முடிந்தது. க்ஷவரக் கத்தி 'டக்'கென்ற சப்தத்துடன் தரையில் திடீரென்று விழுந்தது. நான் திடுக்கிட்டுப்போய், நாற் காலியில் நிமிர்ந்து உட்கார்ந் தேன். அவன், அவசர அவசர மாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டே, கீழே விழுந்த கத்தி யைப் பொறுக்கி எடுத்தான். அதனுடைய முனையைப் பரீட் சித்துப் பார்த்து, அதை ஒரு புறம் வைத்துவிட்டு வேறு ஒரு கத்தியை எடுத்துக் கொண்டான். அவனு டைய பாவம் முழுமையும் மாறி விட்டது. நினைவு, அவனை அடி யோடு மாற்றி, அவனுடைய வயதை ஒரே நொடியில் பன்னி ரண்டு வருஷங்கள் குறைத்துக் காட்டிற்று. உன்னதமான நிலை யில், உல்லாசம் நிறைந்த இளைஞ னாக வாழ்ந்து வந்த அந்த நாட் களில், அவன் வருணித்த, இன்பம் மிகுந்த—ஒருகால் வேதனையும் கலந் திருந்த—அந்த நாட்களில் லயித்துப்போய், என்னை மறந்து விட்டான். அப்படி மறக்கப் பட்டு விடவே, நானும் அவன் உணர்ச்சிகளை உணர முடிந்தது. ஒரு க்ஷண நேரம் திறந்து விடப் பட்ட அந்த ஜன்னல்களின் வழி யாக எட்டிப்பார்த்து, அவனு டைய சிறப்பான கடந்த காலத்தைக் கவனிக்க முடிந்தது. நான் விரும்பியபடி அது உல்லா சம் நிறைந்துதான் விளங்கிற்று. ஆனால், அது சொற்பக் காலத் திற்குத்தான் என்று பின்னால் தெரிய வந்தது. நிகழ் காலம் அவனைக் குரூரமாகக் குத்திக் கிளப்பவே, அவன் விழித்துக் கொண்டான். கடைசியாக மிகுந் திருந்த சோப்புப் பூச்சையும், மயிர்க் காம்புகளையும் க்ஷவரம் செய்ய ஆரம்பித்தான். அவன் மேலே பேசலானான். அவன்

குரலில் சோகம் தொனித்தது. தடுமாறும் புதிய ஸ்வரம் ஒன்று அதில் தென்பட்டது.

"ஒரு கையால் தெய்வம் என் பிறந்த நாட்டிலிருந்து பெற்றோர்களைப் பறித்துக் கொண்டது. இன்னொரு கையால், தொலைவில், எங்கோ இருந்த, பழக்கமில்லாத இடத்தில் எனக்கு ஐச்வர்யத்தை அள்ளி வழங்கிற்று. எனக்குக் குழந்தைகளையும் அளித்தது. காலமும், காதல் மனைவியும், சின்னஞ் சிறு குழந்தைகளும் என் மனப் புண்ணை ஆற்றின; ஆனால், சீக்கிரமே பயங்கரமான பெரிய இடி ஒன்று விழப்போகிற தென்பதை நான் உணரவில்லை."

சோப்புப் போடாமல், வெறும் தண்ணீரை மட்டும் விட்டு முகத்தை நனைத்து, முகத்தை முட்டை போல வழவழப் பாக்குவதற்காக, இரண்டாம் முறையாக க்ஷவரம் செய்யத் தொடங்கினான். வரவிருக்கும் ஒரு சோக நாடகத்தின் கதையை எண்ணி என் மனம் துணுக்குற்றது.

"1935-ம் வருஷம் நடந்த குவெட்டா பூகம்பத்தின் பயங்கரம் உங்களுக்குக் கண்டிப்பாகத் தெரிந்திருக்கும்."

வெடிகுண்டைப் போட்டு விட்டான். மேற்கொண்டு குடும்ப விவரங்கள் அவசியமில்லை. விளைவுதான் முக்கியம். அதை இனிமேலும் நிறுத்தி வைக்க முடியாது.

என் தேகம் உறைந்து போயிற்று. கஷ்டங்களைக் கற்பனை செய்துகொண்டு அளவற்ற அனுதாபம் காட்டுபவன் நான். என் மனக்கண் முன் அழிந்து போய்ப் புதுப்பித்த படம் போன்ற ஏதோ ஒன்று நடுங்கி ஆர்ப்பரித்தது. பூமி பல்பல பாகங்களாகப் பிரிந்து குதித்துக் குமுறுவதை நான் கண்டேன். சிறு சிறு இடுக்குகள் விரிந்து, பிரம்மாண்டமான பிளவுகளாகத் திறந்துகொண்டு, விம்மி எழுந்து, குடிசைகளையும், மாடிக் கட்டிடங்களையும் சேர்த்தாற் போல் விழுங்குவதையும் கண்டேன். பயங்கரமான தெய்வ ஆணையினால் திடீரெனத் தாக்கப்பட்ட குழந்தைகள், ஸ்திரீகள் ஆகியோரின் கதறல் ஒலியும், ஆண்களின் வேதனை முனகல்களும் பூமியின் ஆர்ப்பாட்ட கர்ஜனையிலும், எதிரொலியிலும் அமுங்கிப் போவதையும் கண்டேன். என் தேகம் உறைந்து போயிற்று.

"என் மனைவியும் மூன்று அருமைக் குழந்தைகளும் அன்னை பூமிக்கு இரையானார்கள்" என்று அவன் துக்கத்துடன் சொன்னான்.

"இடிபாடுகளுக் கிடையே நான் ஒரு வாரம் கிடந்தேன். என்னை வெளியில் எடுத்த பொழுது, அனேகமாக என்னையும் பிணக் குவியலில் தூக்கி எறிந் திருப்பார்கள். ஆனால், கருணையும் கவனமும் அதிகம் படைத்த ஒருவன், நான் மூச்சு விட்டுக்கொண் டிருப்பதைக் கண்டு, என்னை ஆஸ்பத்திரியில் சேர்த்தான். கருணையும் கவனமும்! சாவு, கடவுள் என்மேல் மிகவும் தயவு காட்டிச் செய்த செயலாக இருந்திருக்கும்!"

சிறிது நேரம் பேசாமல் இருந்தான். பிறகு, தொண்டையை இடது கையால் தடவிக் கொண்டு, மிச்சமிருக்கும் மிகச் சிறிய மயிர்க் காம்புகளையும் க்ஷவரம் செய்வதற்காக, இன்னொரு கையால் சருமத்தை இழுத்துப் பிடித்துக் கொண்டான். நான் தேகத்தில் சக்தி யற்று

உட்கார்ந் திருந்தேன். ஏதோ ஒரு விஞேதமான ஆத்மீக சக்தியால் அவன் அந்த நிகழ்ச்சியின் பூரண பயங்கரத்தையும் ஞாபகப்படுத்தி விட்டான். அவனுடைய சோகக் குரல் என்னுடைய வயிற்று நரம்புகளைப் பிடித்துக் குலுக்கியது.

"ஆஸ்பத்திரியி லிருந்து வெளி வந்த பிறகு நான்கு மாதங்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருந்தேன்."

நான் சமைந்துவிட்டேன். சோகம் திடீரெனப் பிதற்றலுக்குத் தாவி விட்டதே! அவன் கண்களில் ஜொலித்துக்கொண்டிருந்த விசித்திரமான பளபளப்புக்கு இப்போது காரணம் விளங்கிற்று. அவனே என் தொண்டையில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தி யிருந்தான். இப்பொழுது எந்த நிமிஷத்திலும், அவன் என்னை நாற்காலியோடு சேர்த்துக் கட்டிப்போட்டு, வாயில் சோப்புப் பிரஷை அடைத்து, தொண்டையையும் இந்தக் காதி லிருந்து அந்தக் காதுவரை கிழித்துப் போட்டு விடக் கூடும்! அவனைக் கீழே தள்ளிவிட்டு, வெளியே ஓடிவிட வேண்டு மென்ற ஒரு ஆத்திரம் எனக்கு ஏற்பட்டது. என்னை நானே அடக்கிக் கொண்டேன். நல்ல வேளையாக, என் தேகத்தில் இன்னும் வியர்வை துளிக்கத் தொடங்க வில்லை.

கவனமாக இல்லா திருந்து விட்டவன் போல, "எங்கே? எங்கே இருந்தாய்?" என்று கேட்டேன்.

"பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்; எனக்குக் கொஞ்சம் பைத்தியம் பிடித் திருந்தது" என்று திரும்பவும் சொன்னான்.

ஏதாவது,வேகமுள்ள உயர்ந்த வகைச் சாராயம் அருந்தியிருக்கிறானே, என்னவோ என்று திகைத்தேன். ஆனால், க்ஷவரம் செய்யக் குனிந் திருந்தபொழுது என் முகத்தில் பட்ட அவனுடைய மூச்சுக் காற்று, மேல் காற்றைப் போலப் பரிசுத்தமாக இருந்தது. நான் நிமிர்ந்து பார்த்தேன். அவன் கண்களில் சுடர் விட்டுக்கொண் டிருந்த பளபளப்புப் போய், அதன் இடத்தில் சோகத்தின் சாயை படிந்து கிடந்தது.

"உன் வியாதி ரொம்ப அல்பமானதாக இருந்திருக்க வேண்டும். அதனால்தான் நீ இங்கே இருக்கிறாய்" என்றேன்.

"என்னை வெளியே விட்டுவிட்டார்கள். என்னுடைய ஐம்பதினாயிர ரூபாய் பெறுமான முள்ள சொத்துக்கும், அதைத் தவிர ரொக்கப் பணமாக இருந்த பத்தாயிரத்துக்குமாகச் சேர்த்து, சர்க்கார் ஐயாயிர ரூபாய் நஷ்டஈடு கொடுத்தார்கள். ஆனால், அந்தப் பணம் எனக்கு எதற்காயிற்று? என் அருமை மனைவி மக்களின் விதி, சவத் துணியைப் போல என் அறிவை மூடிவிட்டது. நரகம் கோர தாண்டவம் ஆடிய, பயங்கர நினைவுகளை எழுப்பிக்கொண் டிருந்த அந்த இடத்தில் என்னால் ஒரு நிமிஷமும் இருக்க முடியவில்லை. வித்தியாசங்க ளில்லாத, சர்வஜன நகரம் என்று நீங்கள் கூறும் இந்தப் பம்பாய் நகரத்துக்கு வந்து, இந்தத் தொழிலைத் துவக்கினேன்."

எல்லாம் கிடக்க, நாவிதத் தொழிலில் போய்ப் பிரவேசிப்பானேன் என்று அவனைக் கேட்க எனக்குத் துணிச்சல் வரவில்லை. அவன் அந்தக் கொலை பாதகக் கத்தியை ஒரு புறமாக

வைப்பதைப் பார்த்து, ஒரு ஆறுதல் பெருமூச்சு விட்டேன்.

"ஷாம்பூ வேண்டுமா?" என்று அவன் கேட்டான்.

"வேண்டாம், வந்தனம்" என்று கூறிவிட்டுப் புழுங்கும் வெயிலில் அகப்பட்டுக்கொண்ட புழுவைப்போல, அமைதியின்றி, அவசர அவசரமாக எழுந்துகொண்டேன். அவன் கையில் ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டுக் கடையிலிருந்து வெளியேறினேன்.

"ஒரு நிமிஷம் பொறுங்கள், சார்! முகக்ஷவரத்துக்கு இரண்டு அணாதான் சார்!" என்று அவன் பின்னாலிருந்து கூப்பிட்டான்.

திரும்பிக்கூடப் பார்க்காமல், "சில்லறையை நீயே வைத்துக்கொள்" என்று சொல்லிவிட்டு இந்த மட்டும் உயிருடன் இருக்கவும் பேசவும் முடிந்ததே என்று சந்தோஷப்பட்டுக்கொண்டேன். பயங்கர சொப்பனத்தைக் கண்டுவிட்டு விழித்துக்கொண்டவனைப் போல எனக்கு ஒரு உணர்ச்சி தோன்றியது.

இரானி தேனீர்க் கடைக்குள் நுழைந்து, ஏதோ ஒரு ஆகாரத்தை அவசர அவசரமாக உள்ளே தள்ளி, நன்குக் காய்ச்சி வடிக்கப்பட்டதாகப் பார்த்து இரண்டு 'கப்' தேனீரும் குடித்துவைத்தேன். கழுத்தைச் சுற்றிச் சுற்றிக் கையால் தடவிப் பார்த்துக்கொண்டேன். உயிருடன், சாதாரண மனிதர்களின் உலகத்தில் நான் இருப்பதற்காக மகிழ்ந்து போனேன்.



### உண்மை ஞானம்

புயற்காற்று அடிக்கும்போது அரசமரம் இது, ஆலமரம் இது என்று வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாது. அது போல, உண்மை ஞானமாகிய புயற்காற்று ஒருவனுக்குள் அடிக்கும்போது, அவனிடம் ஜாதி பேதம் இருக்க முடியாது.

—ராமகிருஷ்ணர்.

### புரியாத விஷயம்!

பாரிஸ் கூட்ட மொன்றில் இருபது நிமிஷங்கள் பேசினான் இளம் அமெரிக்கப் பிரசங்கி. அவன் உட்கார்ந்ததும் சபையில் லேசாக ஆரவாரமிருந்தது. பிறகு, பாரிஸ்வாசி ஒருவர் எழுந்து தன் தாய் மொழியில் ஒரு அற்புதமான பிரசங்கம் செய்தார். அவர் முடித்ததும் சபையில் ஒரே ஆரவாரம். அமெரிக்கப் பிரசங்கியும் மரியாதை கருதி வேண்டா வெறுப்பாக அதில் கலந்து கொண்டார். அவருக்கு அடுத்தபடி அமர்ந்திருந்த மனிதன் மெதுவாக அமெரிக்கனிடம் பின்வருமாறு சொன்னான்: "நானாக இருந்தால் உங்களைப்போல் கைதட்ட மாட்டேன். இரண்டாவது பேசினவன் உங்கள் பிரசங்கத்தைத்தான் பிரெஞ்சில் விளக்கிக் கூறினான்."

### ஒரே காட்சி

மலைச் சிகரத்தை யடையப் பல வழிக ளிருக்கின்றன. ஆனால், சிகரத்தி லிருந்து கிடைக்கும் காட்சி யென்னவோ ஒன்றுதான்.

—சீனப் பழமொழி

### சிரிப்பு மருந்து

சூரிய வெளிச்சத்தைப் போலச் சிரிப்பும் ஒரு நோய்க்கொல்லி.

—பெவர்லி நிக்கல்ஸ்

# பிலிப்பைனுக்குச் சுதந்தரம்

ஆர். ராமநாதன்

"பிலிப்பைனுக்குச் சுதந்தரம் கொடுத்து விட்டோம்" என்று உலகம் அறியச் சொன்னார் ட்ரூமன். "பிலிப்பைனுக்குப் பரிபூரண சுதந்தரம் கிடைத்து விட்டது" என்று கூறினார்கள் சுதந்திரத்தின் தத்துவத்தை அறியாதவர்கள். "சரித்திரம் இதுவரையில் கண்டிராத புதுமை ஜூலை மாதம் நாலாம் தேதி நிகழ்ந்தது" என்றார்கள் உண்மையை உணராதவர்கள். "சமாதான ரீதியான பரிணமம்" என்று கூறி மகிழ்ந்தார்கள் விஷயங்களை மேலெழுந்தவாரியாகப் பரிசீலனை செய்பவர்கள். "பரந்த நோக்கத்துடன் பிலிப்பைனை அடிமைத் தளையிலிருந்து விடுவித்த" அமெரிக்காவை வாழ்த்தினார்கள் மிதவாதிகள். அமெரிக்காவின் செயலை அறிஞர் எனப்படுவோர் ஏற்றிப் போற்றினர்; பல ஆசிரியர்கள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை வாழ்த்தினர்.

உண்மையில் பிலிப்பைன் விடுதலை பெற்றதா? பிலிப்பைன் கழுத்தை நெரிப்பதை அமெரிக்க ஏகாதிபத்தியம் நிறுத்தி விட்டதா? தங்கள் எதிர்கால அரசியலை வகுத்துக் கொள்ள அந்த நாட்டு மக்களுக்கு உரிமை இருக்கிறதா? அமெரிக்க முதலாளிகளின் இரக்கமற்ற சுரண்டலுக்கு விடை கொடுத்துவிட்டு, பிலிப்பைன் ஜனங்கள் புதிய பிலிப்பைனைச் சிருஷ்டிக்க முடியுமா? இந்தக் கேள்விகளுக்கு விடை கண்டுபிடித்தால் பிலிப்பைனின் உண்மையான நிலை எளிதில் விளங்கும்.

சுதந்தரம் கொடுப்பதாகச் சொல்லி ஏகாதிபத்தியம் உலக மக்களை ஏமாற்ற முயன்றது—முயலுகிறது. இந்தக் கலையில் தேர்ந்தவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள். எகிப்துக்குச் சுதந்தரம் கொடுத்ததாகப் பறை அறைந்தது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். ஆனால், உண்மையில் அது எகிப்தின் கழுத்தை நெரித்தது. ஈராக்குக்கு விடுதலை அளித்ததாகக் கோஷித்தது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். ஆனால், உண்மையில் ஈராக்கின் பிரஜா உரிமைகளை மிதித்துத் தேய்த்தது. எகிப்துக்குப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் சுதந்தரம் கொடுத்தது உண்மையானால், ஈராக் விடுதலை அடைந்தது உண்மையானால், பிலிப்பைனுக்கு அமெரிக்கா சுதந்தரம் கொடுத்ததும் உண்மைதான்! அப்படியானால் அமெரிக்க ஏகாதிபத்தியம் இந்த வழியை ஏன் மேற்கொண்டது? 1946ஆம் வருடம் ஜூலை மாதம் பிலிப்பைனுக்குச் சுதந்தரம் கொடுப்பதாக ஏன் அன்று வாக்குறுதி அளித்தது?

அடிமைத்தனத்தை அனுபவித்துச் சலித்த பிலிப்பைன் மக்கள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இடைவிடாது போர் புரிந்தார்கள். சுதந்தர சக்திகள் வளர்ந்தன. பிலிப்பைனைப் பழைய முறையில் ஆள முடியாது என்பதை அமெரிக்க ஏகாதிபத்தியம் உணர்ந்தது.

கத்தியின்றி, ரத்தமின்றி, யுத்தமின்றிப் பிலிப்பைன் நாடு சுதந்தரம் பெற்றுவிட்டதாகவே மேற்கத்தியார் பறையடிக்கிறார்கள். இந்தப் பித்தலாட்டத்தை அம்பலப்படுத்தி, உண்மை நிலையை விளக்குகிறார் கட்டுரையாளர்.

ஜூ-ப். 46.

எனவே, நேரடியாகப் பிலிப்பைனே ஆளுவதற்குப் பதிலாக மறைமுகமாக அந்த நாட்டை ஆள முடிவு செய்தது. இதன் விளைவுதான் சுதந்தரப் பிரகடனம்!

பிலிப்பைனின் இன்றைய நிலை என்ன? சமீபத்தில் "சுதந்தரப் பிலிப்பைனில்" தேர்தல் நடந்தது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கூலியை அதிகாரத்திற்குக் கொண்டு வருவதற்காக அமெரிக்க முதலாளிகள் "பகீரதப் பிரயத்தனம்" செய்தனர். கிரீசில் பிரிட்டிஷ் முதலாளிகள் மேற்கொண்ட அதே முறையை அமெரிக்க முதலாளிகளும் மேற்கொண்டனர். தேர்தலை "ஜனநாயக முறையில்" நடத்தும் பொறுப்பு இரண்டு லட்சம் ஆயுதம் தாங்கின சிப்பாய்களிடம் ஒப்படைக்கப்பட்டது! யார் ஓட்டுப் போடலாம் என்பதை ஆயுதம் தாங்கின சிப்பாய்கள் தான் முடிவு செய்தனர்.

ர்தலில் ஜனங்களின் உண்மையான பிரதிநிதி ஓஸ்மினுவும், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கூலி ரோஹாசும் போட்டியிட்டனர். பொது ஜனங்கள் ஓஸ்மினுவை ஆதரித்தனர். ஆனல், ஆயுதம் தாங்கின சிப்பாய்கள் ஓஸ்மினுவை ஆதரிப்பவர்களை ஓட்டுப் போட அனுமதிக்கவில்லை! உண்மையில், ரோஹாசுக்கு ஓட்டுப் போடும்படி சிப்பாய்கள் ஜனங்களை நிர்ப்பந்தப்படுத்தினுர்கள். அமெரிக்க ஏகாதிபத்தியத்தை ஆதரிக்க மறுப்பவர்கள் ஓட்டுச் சாவடியை அணுகக்கூட முடியவில்லை! எனவே, எழுபது லட்சம் ஓட்டர்களில் இருபது லட்சம் ஓட்டர்கள்தான் ஓட்டுப் போட்டார்கள்! அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தயவுடன் ரோஹாஸ் அதிகாரத்திற்கு வந்தார்! ரோஹாஸின் வாஷிங்டன் பிரதிநிதி ஜூன் மாதம் 14-ம் தேதி என்ன சொன்னர், தெரியுமா? "பிலிப்பைனில் சமாதானத்தையும், ஒழுங்கையும் நிலைநிறுத்துவதற்காக நமக்கு அமெரிக்க ராணுவத்தின் உதவி தேவை!"

பிலிப்பைனின் இன்றையப் பொருளாதார நிலை என்ன? பிலிப்பைனின் பொருளாதாரத்தை யார் நிர்வகிக்கிறர்கள்? அமெரிக்க முதலாளிகள்! ஏனெனில், பிலிப்பைனின் உள்நாட்டு வர்த்தகமும், வெளிநாட்டு வர்த்தகமும் அமெரிக்க முதலாளிகளின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. சர்க்கரைத் தொழிற்சாலைகள் அமெரிக்கர்களின் தனிச் சொத்து; தேங்காய் எண்ணெய் மில்களும் அவர்கள் ஆதிக்கத்தில் இருக்கின்றன.

ஜப்பானிய பாசிஸ்டுகளின் இரும்புப் பிடியிலிருந்து பிலிப்பைன் விடுவிக்கப்பட்டதும் ஜப்பானியரின் சொத்து பிலிப்பைனுக்குக் கொடுக்கப்படும் என்றது அமெரிக்கா. ஆனல், நடந்ததென்ன? ஜப்பானியருக்குச் சொந்தமான சணல் மில்களை அமெரிக்க முதலாளிகள் கைப்பற்றினர்.

இதன் விளைவு என்ன? வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் அமெரிக்கர் ஆதிக்கத்திற்கு உட்பட்டன. எனவே, பிலிப்பைன் தொழிற்சாலைகளைப் பெருக்க முடியாது; ஜனங்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தவும் முடியாது. முன்போல் அது அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் காலனியாகத்தான் இருக்கும். பிலிப்பைன் அமெரிக்காவுக்குத் தேவையான மூலப் பொருள்களை

உற்பத்தி செய்யும்; அமெரிக்கா உற்பத்தி செய்யும் பொருள்களை அது விலைக்கு வாங்கும்.

"சுதந்தரப் பிலிப்பைனுக்கு" அமெரிக்க ஏகாதிபத்தியம் கீழ்க்கண்ட நிபந்தனைகளை விதித்திருக்கிறது.

1. அமெரிக்காவுடன் பிலிப்பைன் வர்த்தக உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டும். அமெரிக்காவின் அனுமதியின்றிப் பிலிப்பைன் சாமான்களை ஏற்றுமதி செய்யக் கூடாது. பிலிப்பைனில் வாழும் அமெரிக்கர்களுக்குச் சலுகைகள் காட்டப்பட வேண்டும்.

2. பிலிப்பைன் அமெரிக்காவுடன் வர்த்தக உடன்படிக்கை செய்துகொண்டதும் அமெரிக்கா அதற்குப் பொருளுதவி புரியும்.

3. சட்ட ரீதியாக அமெரிக்கர்களுக்கு பிலிப்பைன் சொத்துரிமை வழங்க வேண்டும்.

4. அமெரிக்கத் துருப்புகள் பிலிப்பைனில் தங்க உரிமை வேண்டும்.

இந்த நிபந்தனைகளை ஒப்புக்கொள்ள ரோஹாஸ் தயங்கமாட்டார். உண்மையில், அவர் இன்னும் ஒருபடி முன் சென்றார். 'பிலிப்பைன், ஐக்கிய அமெரிக்காவின் அன்னிய நாட்டுக் கொள்கையைப் பரிபூரணமாக ஆதரிக்கும்'' என்றார் அவர். அமெரிக்க முதலாளிகள் பிலிப்பைனைச் சுரண்டுவதை அவர் பகிரங்கமாக வரவேற்றார்! அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கூலி என்று அவரை அழைப்பதில் தவறு இருக்க முடியுமா?

அமெரிக்கா பிலிப்பைனுக்குச் சுதந்தரம் கொடுக்கவில்லை; ஆனால், சுதந்திரத்தின் பெயரில் அடிமைச் சாசனத்தை அதன் கழுத்தில் தொங்கவிட்டது. இந்த உண்மையை அமெரிக்கப் பத்திரிகை "நேஷன்" பகிரங்கமாக ஒப்புக் கொள்ளுகிறது. "ஜனநாயகத்தின் பரம விரோதியும், அமெரிக்காவின் உரிமையைத் தாங்குகிறவருமான ஒருவர் அதிகாரத்திற்கு வர நாம் உதவி புரிந்தோம். ஜூலை மாதம் பெயர் அளவில் நாம் பிலிப்பைனுக்குச் சுதந்தரம் கொடுப்போம், அதன் கைகளையும், கால்களையும் அமெரிக்க மூலதனத்துடன் பிணைத்துவிட்டு.'' இதுதான் அமெரிக்க ஏகாதிபத்தியம் பிலிப்பைனுக்கு அளித்த சுதந்தரம்!



### மனித லட்சியம்

இந்த வாழ்க்கையிலேயே மனிதன் பூரண மனிதனாக வேண்டும்; அவன் அமரனாக வாழ வேண்டும். இதுவே ஒவ்வொரு மனிதனுடைய லட்சியமாக இருக்க வேண்டும். இதற்கு வகை செய்யாத எந்தப் பொருளாதாரத் திட்டமும், அது முதலாளித்துவமானாலும் சரி, அபேதவாதமானாலும் சரி, அவற்றால் ஏற்படும் முன்னேற்றம் மனித சமூகத்தினுடைய சரியான முன்னேற்றமாக இருக்காது.

—பரதன் குமரப்பா.

### உலக சம்பந்தம்

தன்னுட னிருக்கும் மனிதர்களைவிடத் தன்னை உயர்ந்தவனாக்கிக் கொள்ளும் பக்தனிடம் ஆண்டவன் பிரியங் கொள்ளுவ தில்லை.

எனக்கு உலகத்தால் என்ன ஆகவேண்டும்? பிரயாணம் செய்கிறவன், வழியில் ஒரு மரத்தின் அடியில் சிறிது நேரம் தங்கியிருந்துவிட்டுப் போவதைப் போன்றதுதான், எனக்கு உலகத்துடன் உள்ள சம்பந்தம்.

—நபியடிகள்.

# வில்லியம் சரோயன்

பா. கோபாலகிருஷ்ணன்

சரோயனுடைய முதல் புத்தகம் "பறக்கும் ஊஞ்சலில் துணிவுள்ள இளைஞன்" அப்போது தான் வெளியாகி இருந்தது. மன்ஹாட்டன் நகரைச் சேர்ந்த ஆசிரியர் ஒருவர் சரோயனை 'ஆசிரியர்கள் சங்க'த்துக்கு அழைத்துச் சென்றார். அங்கே சரோயன் புத்தகத்துக்கு மதிப்புரை எழுதியிருந்த ஹாரி ஹான்சனை சரோயனுக்குக் காட்டினார். கூட்டம் நடந்துகொண்டிருந்தது. விடுவிடென்று சரோயன் அந்த விமரிசகரிடம் சென்றார். "நான்தான் பில் சரோயன், உலகின் தலைசிறந்த எழுத்தாளன்" என்று கூறித் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்து விட்டார்!

ஷாவை உலகம் அறியும். பில் சரோயனை இப்போதுதான் உலகம் அறிந்துகொள்ள ஆரம்பித்திருக்கிறது.

ஏழ்மையில் பிறந்து, இன்னல்களிடையே தன் இளமையைக் கழித்துத் தளராத தன்னம்பிக்கையைத் துணைக்கொண்டு எழுத்துலகின் தலைமையை எட்டிப் பிடித்த சரோயனின் வாழ்க்கை சுவை மிகுந்தது.

1908-ல் கலிபோர்னியோவைச் சேர்ந்த ஃபிரெஸ்னு என்ற ஊரில் ஒரு ஆர்மீனியக் குடும்பத்தில் சரோயன் பிறந்தார். மூன்று வயதில் தன் தந்தையை இழந்த அவர், தனது ஏழாம் வயதுவரை அலமீடா என்ற ஊரை யடுத்த ஒரு அனாதை இல்லத்தில் கழித்தார். பிறகு ஃபிரெஸ்னுவில் தாயாரோடு வசிக்கலானார்.

ஃபிரெஸ்னுவில் ஆர்மீனியர் அதிகம். ஆனால், சமூகத்தில் பிறர் அவர்களைக் கேவலமாக நடத்தினார்கள். இளமையில் தான் பட்ட கஷ்டங்களையும், சகிக்க நேர்ந்த அவமதிப்புக்களையும் சரோயன் என்றும் மறக்க வில்லை.

ஆரம்பத்தில் சரோயன் ஒரு மட்டமான இலக்கணப் பள்ளியில் படிக்க நேர்ந்தது. தன் பள்ளியனுபவம் 'ஒரே தலைவலி' என்றே அவர் கூறுகிறார். "ஆசிரியை முழிக்கும்படித்தான் நான் கேள்விகள் கேட்பேன். என்னை அவள் தனியறையில் போட்டு அடைத்து விடுவாள். ஆனால், ஜன்னல் வழியே நான் வெளியேறி விடுவேன். பிரின்சிபால் கசையடி கொடுப்பதுண்டு. பள்ளி வாழ்க்கையின் மந்தத்தைப் போக்க, அவ்வப்போது ஏதாவது கலாட்டாசெய்வேன்."

பள்ளிக்கூடம் முடிந்ததும் அவர் தன் சகோதரன் ஹென்றியுடன் பத்திரிகைகள் விற்பது வழக்கம். இந்த அனுபவத்தை வைத்து ஒருமுறை பள்ளிக்கூடக் கட்டுரைப் போட்டி யொன்றில் கலந்துகொண்டு, பரிசும் பெற்றார். அப்போது அவருக்கு வயது ஒன்பது.

பதின்மூன்றும் வயதில் உள்ளூர்த் தபாலாபீசில் தந்திப் பையனாக வேலை செய்தார். வாரம் 15 டாலர் சம்பளத்தில், மாலை 4 மணியிலிருந்து நடு நிசிவரை, வேலை செய்வார்.

ஏழ்மையில் பிறந்து, இன்னல்களிடையே தன் இளமையைக் கழித்துத் தளராத தன்னம்பிகையைத் துணைகொண்டு எழுத்துலகின் தலைமையை எட்டிப் பிடித்த சரோயனின் வாழ்க்கை சுவை மிகுந்தது.

சைக்கிளில் தலை தெறிக்கும் வேகத்தில் பறந்த அவருக்கு 'வேகம்' என்றே ஆபீசில் பெயர் வைத்து விட்டார்கள். எல்லோரும் இப்படிக் கூப்பிடுவதை வெறுத்த அவர், அந்த வேலையை விட்டுத் தொலைத்தார். இதே சமயம்தான் அவர் படிப்பை நிறுத்தியதும். அவருக்கு வயது அப்போது பதினறு.

அதன் பிறகு, தன்னுடைய மாமன் ஆபீசில் சேர்ந்து டைப் அடிக்கவும் சுருக்கெழுத்துக் கற்கவும் தொடங்கினர். பிறகு மாமனுடைய திராட்சை தோட்டத்தில் வேலை செய்து சம்பாதிக்கலானர். அங்கே ஜப்பான், மெக்ஸிகோ மொழிகளைக் கொஞ்சம் கற்றுக் கொண்டார். இங்கும் அதிக நாள் தங்க வில்லை.

பதினேழாம் வயதில் சரோயன் சான் பிரான்சிஸ்கோ சென்ருர். அங்கே பல இடங்களில் பல வேலைகளில் அமர்ந்தார். டைப்பிஸ்ட் ஆகவும், கடைகளில் கணக்கனகவும், ஸ்டோர்களில் பார்சல் பிரித்து அடுக்குபவராகவும்,—என் பியூனகவும் கூட, அவர் வேலை செய்தார். சான் பிரான்சிஸ்கோவில் அவர் அதிக நாள் வேலையி லிருந்தது தபால் தந்தி ஆபீசில்தான். குமாஸ்தாவாக நுழைந்த அவர் ஆபீஸ் மானேஜர்வரை உயர்ந்தார். ஆனல், மேலதிகாரிகளுக்கு அவர் எழுதிய திமிரான கடிதத்தின் பயனக அவர் வெளியேற நேர்ந்தது.

ஃபிரெஸ்னுவில் அவமதிப்பை மட்டுமே கண்ட சரோயன் சான்பிரான்சிஸ்கோவில் ஆதாவைக் காணலானர். மக்களோடு தாராளமாக நெருங்கிப் பழகினர். பழைய புத்தகக் கடைகளிலிருந்து 5 செண்டு விலையுள்ள பல புத்தகங்களை வாங்கிப் படிக்க ஆரம்பித்தார். மனித உள்ளத்தை அறிந்துணரவும், சுயமாகச் சிந்திக்கவும் தலைப்பட்டார். எழுத ஆரம்பித்தார். எண்ணற்ற கதைகள் எழுதினர். அவை பிரசுரமாகாவிட்டாலும் சரோயன் வருந்த வில்லை. தான் ஒரு எழுத்தாளன்என்ற உணர்வு அவருக்கு ஏற்பட்டுவிட்டது. வேறு எதையும் பற்றி அவர் கவலைப்படவில்லை.

எழுத்துலகில் புகழ் பெறுவதற்கு முன் சரோயன் புனைபெயர்களில் எழுதுவதுண்டு. ஜோ பகானே, சிராக் கோர்யான் என்பவை அவருடைய இரண்டு புனை பெயர்களாகும்.

1933 டிசம்பரி லிருந்து அவரது இலக்கியப் புகழ் ஆரம்பித்தது என்னலாம். கதை என்ற பத்திரிகை சரோயனுடைய "பறக்கும் ஊஞ்சலில் துணிவுள்ள இளைஞன்" என்ற கதையைப் பிரசுரித்து, அதற்குப் பதினைந்து டாலர்கள் அனுப்பியது. அதிலிருந்து சரோயனின் கதைகள் அந்தப் பத்திரிகையில் தொடர்ந்து வெளிவரலாயின.

ராண்டம் ஹவுஸ் என்ற பிரசுராலயம் சரோயனுடைய "பறக்கும் ஊஞ்சலில் துணிவுள்ள இளைஞன்," "மூச்சு இழுத்தலும் மூச்சு விடுதலும்" என்ற இரண்டு சிறுகதைத் தொகுதிகளை வெளியிட்டது. முதல் புத்தகத்தில் 11,000 பிரதிகள் விற்றன.

நாடகாசிரிய ராவதற்கு முன் சரோயன் ஏராளமான கதைகளும் கட்டுரைகளும் எழுதிக் குவித்தார். அவற்றில் 400 க்கு அதிகமாகப் பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும் வெளிவந்துள்ளன. சிறந்த நாவல்களும் நாடகங்களும் அவர் எழுதி யிருக்



RM. MUTHIAH
ARTIST

கிறர். 1939ல் ப்ராட்வேயில் அவருடைய மூன்று நாடகங்கள் 13 மாதங்கள் வெற்றிகரமாக நடிக்கப் பட்டன.

அவர் எழுதிய நூல்களில் சில வருமாறு: கதைத் தொகுதிகள்: (1) சரோயன் கட்டுக்கதைகள் (2) என் பெயர் ஆராம் (3) அமைதி—எவ்வளவு அற்புதமானது! (4) புலிகளோடு தொல்லை. (5) அன்பே! இதோ என் தொப்பி! (6) மூன்று முறை மூன்று. (7) மூச்சு இழுத்தலும் மூச்சு விடுதலும் (8) பறக்கும் ஊஞ்சலில் துணிவுள்ள இளைஞன்.

நாடகங்கள்: (1) மேட்டு நிலங்களில் என் உள்ளம் (2) உன் வாழ்வுக் காலம் (3) காதலின் பழஞ் சுவைக் கீதம். (4) ராசில் டாசில் (5) அழகிய மனிதர்கள் (6) மரங்களில் ஸ்வீனி.

நாவல்:—மனித விநோதம்.

"வெண் மயிர்ப் பையன்" என்று தன்னைப் பற்றியே ஒரு நாடகம் எழுதினர். ஆனல் பாஸ்டன் நகரில் இந்த நாடகம் ஒரு வாரத்துக்குமேல் ஓடவில்லை!

எதிலும் சரோயன் போக்கே தனி. பல சமயங்களில் அவருடைய செயல்கள் பலருக்கு ஆச்சரியத்தையும், திகைப்பையும் விளைத் திருக்கின்றன. தன் மனம் போன போக்கில் காரியங்களை நடத்திச் செல்வதில்தான் அவருக்குப் பிரியம். சில சந்தர்ப்பங்களில், அவருடைய செய்கைகள் அவரை ஒரு 'அபூர்வப் பிரகிருதி' யென்று பிறர் நினைக்கும்படி செய்துள்ளன.

"உன் வாழ்வுக்காலம்" என்ற அவருடைய நாடகத்துக்கு, புலிட்சர் பரிசு (1000 டாலர் பெறுமதியுள்ள இலக்கிய வெகுமதி) கொடுக்கப்பட்டது. "செல்வம் (புலிட்சர் பரிசு) கலையை (சரோயன்) ஆதரிக்கவேண்டுவதில்லை" என்று கூறி அந்தப் பரிசை மறுதளித்துவிட்டார். இதனல், அந்தப் பரிசைப் பெற்றுக்கொண்ட ஸ்டீன்பெக், கார்ல் சாண்ட்பர்க் இவர்களைவிட சரோயன் பெயர் பிரபலமடைந்தது. அவர் புகழும் இரட்டித்தது.

கார்பன் காகிதத்தைக் கண்டாலே அவருக்கு ஆகாது. எது எழுதினலும் அதற்குக் கார்பன் பிரதி எடுத்து வைத்துக்கொள்வது கிடையாது. இந்தப் பழக்கம் ருஷ்யாவில் அவரை ஒரு தடவை அதிகாரிகளோடு தகருறில் மாட்டிவைத்து விட்டது. 1935ல் அவர் ருஷ்யா போயிருந்தார். தன் அனுபவங்களை "மாஸ்கோவின் கண்ணீர்" என்ற கதையாக எழுதித் தன் அமெரிக்கப் பத்திரிகைக்கு அனுப்பினர். பின்னர் கேட்டதில் அது போய்ச் சேரவில்லை என்று தெரிந்தது. ருஷ்ய அதிகாரிகளை விசாரித்துப் பார்த்தார். பயனில்லை. ருஷ்ய அரசாங்கத்துக்கு விரோதமாகத் தன் கதையில் எழுதியிருந்தபடியால் தணிக்கை அதிகாரிகள் தான் அதைப் பறிமுதல் செய்திருப்பார்கள் என்று அவருக்குப் பலத்த சந்தேகம். கதையை வெகு அழகாக எழுதியிருந்தார். ஆனல், அதற்குக் கார்பன் பிரதி எடுத்து வைத்துக் கொள்ளாததால், அந்தக் கதை போயேவிட்டது. சரோயனுக்கு இதில் மிகவும் வருத்தம்.

எதையும் அவர் ஒரு முறை எழுதுவதோடு சரி. தான் எழுதுவதெல்லாமே சிறந்ததாகத் தோன்றுவதால், ஒரு முறை எழுதிவிட்ட பிறகு, அதைத் திருத்துவதோ, மாற்றி எழுதுவதோ கிடையாது. பிரசுரகர்த்தர்களுக்குச் சில சமயம் இதனல் அதிகம் தொந்தரவு ஏற்பட்டதுண்டு.

ஆனால், நாடகங்கள் இதற்கு விலக்கு. தனக்குத் தோன்றும் போதுதான் எழுதுவார். தோன்றியபடிதான் எழுதுவார். ஆனால், மனம் வைத்து எழுதினால், வெகு சீக்கிரத்தில் முடித்து விடுவார். "உன் வாழ்வுக் காலம்" என்ற நாடகத்தை ஆறு நாட்களிலும், "காதலின் பழஞ் சுவைக் கீத"த்தை மூன்றே நாட்களிலும் எழுதினாராம்.

வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் அவருடைய கருத்துக்களே அலாதியானவை. ஆடை விஷயத்தில் அவருடைய போக்கு விசித்திரமானது. ஒரு தடவை, ட்வீட் மேல்கோட்டு ஒன்று வாங்கினார். அது அவரைப்போல் நான்கு மடங்கு பெரியதா யிருந்தது. கடைப் பையன் கேட்டபோது, "இப்படி ஒரே 'தொள தொளாவாய்' இருப்பதுதான் நல்லது. போடுவதும் கழட்டுவதும் எவ்வளவு சுலபம் தெரியுமா?" என்றார் சரோயன்.

ஒருநாள் அவருக்கு ஒரு வேடிக்கையான எண்ணம் தோன்றியது. சிறந்த எழுத்தாளர்களின் மோசமான எழுத்துக்களைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று நினைத்தார். பல எழுத்தாளருக்கும் எழுதினார். ஆனால், அவருக்குக் கிடைத்த மோசமான எழுத்துக்கள் எல்லாம் மோசமான எழுத்தாளர்களிடமிருந்தே வந்திருந்தன. சிறந்த எழுத்தாளர்கள் யாருமே எழுதவில்லை!

குடிப்பது, புத்தகங்கள் படிப்பது, குதிரைகள் மேல் பந்தயம் கட்டுவது, பயங்கர சினிமாப் பார்ப்பது, டென்னிஸ் ஸ்டட் போக்கர் ஆடுவது— இவை யெல்லாம் சரோயனுக்கு மிகவும் பிடித்த காரியங்கள்.

"வாழ்நாள் பூராவும் நான் சட்டங்களைக் கண்டு சிரித்திருக்கிறேன். சம்பிரதாயங்களைப் பொருட்படுத்தியதில்லை. வாழ்க்கை முறைகளையும், தனி மனிதப் போக்குகளையும் நையாண்டி செய்திருக்கிறேன்" என்று பெருமைப் பட்டுக் கொள்கிறார் சரோயன்.

இலக்கிய உலகில் வேறு எவரையும் பின்பற்றாது தனக்கெனத் தனிப்பாதை வகுத்துக்கொண்ட 'புதுமைப் பித்தன்' சரோயன். சட்டதிட்டங்கள், வரை முறைகள் எல்லாவற்றையும் காற்றில் எறிந்து, தன் மனப்போக்கில் எழுதி இலக்கியத்தில் புரட்சி விளைத்த பேனா வீரர் அவர். எதைப்பற்றி வேண்டுமானாலும் எழுதலாம், எப்படி வேண்டுமானாலும் எழுதலாம் என்று காட்டினார். கற்பனைக் காட்டில் தறிகெட்டுத் திரியாது, வாழ்வில் கண்டது, கேட்டது, அனுபவித்தது இவற்றையே கதைகளாகவும், கட்டுரைகளாகவும் எழுதினார். அவருடைய கதைகளில் சிறுகதை லட்சணங்களை யெல்லாம் காணமுடியாது. அவை சிறுகதைகளே அல்ல. வாழ்க்கையில் பல்வேறு சந்தர்ப்பங்களில் அவருடைய மனநிலையைப்பிரதிபலிக்கும் சொல் சித்திரங்கள் அவை என்று சொல்லலாம். தான் உயிரோடிருப்பதில் ஏற்படும் சந்தோஷம், தலை வெட்டிக்கொள்ள வேண்டியதன் அவசியம், டைப் யந்திரத்தின்மேல் தனக்குள்ள ஆசை, வியாபாரத்தில் தனக்குள்ள அவநம்பிக்கை, விலைமகளின் தியாக வாழ்வு, தந்தை வழிபாடு இவை போன்ற சாதாரண விஷயங்களைப் பற்றியன அவருடைய கதைகள். அவர் எழுத்துக்களில் எங்கும் அவரைப் பற்றிய குறிப்புக்களைக் காணலாம்.

"நான் பிறவி எழுத்தாளன்"— இதுவே சரோயன் தன்னைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம். மேலும், "நான் எழுதுகிறேன் என்றால் வேறு நாகரிகமான வேலை எதுவும் இல்லாததனால் தான்" என்கிறார். தான் ஒரு எழுத்தாளனாயிருப்பதில் அவருக்கு மட்டற்ற பெருமை. தன்னுடைய எழுத்துத் திறமையில் அவருக்குப் பூரண நம்பிக்கையுண்டு.

மாப்பசான், செகாவ் இவர்களுக்கெல்லாம்பிறகு இலக்கிய உலகில்—இளைஞர் உள்ளங்களில், தன் எழுத்துக்களின் மூலம் நிலையான செல்வாக்குப் பெற்று விளங்கும் ஒரு எழுத்தாள மேதை சரோயன்.

'என்னைப் போல எழுத்தாளனாயிருப்பதில் நீங்கள் மட்டற்ற கர்வமும், பக்தியும் கொள்ள வேண்டும். அபாரமான திறமை உங்களுக்கு இருக்க வேண்டும். என்னைப்போல் ஒரு எழுத்தாளன் ஆக ஒருவனுக்கு வருஷக் கணக்கில்—ஏன், நூற்றாண்டுகள் கூடப் பிடிக்கும்." என்று குரலெடுக்கும் அவருடைய பெருமிதம் போற்றற் குரியது. தன்னைத் தான் மதிக்கத் தெரிந்த அவரை உலகம் போற்றுவதில் வியப்பு என்ன இருக்கிறது?

## போட்டோப் பரிசு

1. உங்களுக்குப் பிடித்தமான அழகிய போட்டோக்களை அனுப்புங்கள், இயற்கைக் காட்சிகள், மிருகங்கள், பட்சிகள், குழந்தைகள், பெண்கள், மனிதர்கள்— இன்னும் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்.
2. 'சக்தி' ஆசிரியர் தேர்ந்தெடுக்கும் படங்களுக்குப் பரிசு கொடுக்கப் பெறும்.
3. பரிசுபெற்ற படங்கள் அந்தந்த மாதச் 'சக்தி'யில் வெளியிடப் பெறும்.
4. முதல் பரிசு ரூ. 25, இரண்டாவது பரிசு ரூ. 15, வெளியிடத் தகுதியான, பரிசு பெறாத படங்களுக்குப் பத்து ரூபாய் கொடுக்கப் பெறும்.
5. அனுப்பும் படங்கள் தங்களுடையதுதான் என உறுதியளிக்க வேண்டும்.
6. ஆசிரியர், 'சக்தி' ராயப்பேட்டை, சென்னை என்ற விலாசத்துக்குப் படத்தை நன்றாகக் கட்டி ரெஜிஸ்டர்டு புக்போஸ்டில் அனுப்ப வேண்டும்.



### தெரிந்து விடும்!

சப்தத்தைக் கொண்டே ஒரு பாத்திரம் விரிந் திருக்கிறதா, இல்லையா என்று கண்டுபிடித்து விடலாம். அதேபோல், மனிதனையும் அவன் பேச்சிலிருந்தே புத்திசாலியா, மடையனா என்று அறிந்து கொள்ளலாம்.

—டெமாஸ்தனிஸ்.

### இயற்கையின் ஏற்பாடு

இயற்கை, மனிதனுக்கு இரண்டு காதுகளும், இரண்டு கண்களும் கொடுத்திருக்கிறது. ஆனால் நாக்கு மட்டும் ஒன்று தான். பேசுவதைக் காட்டிலும், பார்ப்பதும் கேட்பதும்தான் அதிகம் இருக்க வேண்டும் என்பதே இதன் அர்த்தம்.

—சாக்ரடீஸ்.

# பலாத்காரம் வெல்லுமா?

●

**மகாத்மா காந்தி**

சிந்து மாகாணத்தில் உள்ள பொறுப்பு வாய்ந்த மந்திரிகளும், அவர்களைப் போலவே பொறுப்பு வாய்ந்த இதர முஸ்லிம் லீகர்களும் பச்சை பச்சையாகப் பலாத்காரத்தைப் போதித்துக்கொண் டிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவது தவறு. உண்மையை ஒளியாமல் கூறுவது தர்மம். ஆனல், ஒளியாமல் கூறப்படும் விஷயம் ஆபாசமானதாயிருந்தால், ஒளியாமல் சொல்வதென்பது லீகர் சொன்னுலும் வேறு யார் சொன்னுலும் வெறுத்து ஒதுக்க வேண்டிய அதர்மமே ஆகும். முஸ்லிம் லீகில் சேராத முஸ்லிம்கள் துரோகிகள் என்று ஒருவர் சொல்லுகிருர். ஹிந்துக்கள் காபிரிகள், அவர்களைக் காபிரிகளைப் போலவே நடத்த வேண்டுமென்று மற்ருெருவர் சொல்லுகிருர்.

நேரடியான செயல் என்ருல் என்ன என்பதையும், அதை எப்படி நடத்த வேண்டும் என்பதையும் கல்கத்தா நகரம் கண் முன்னுல் நிதர்சனமாகக் காட்டி விட்டது.

இந்தப் பலாத்காரச் செயல்களால் லாபம் அடைந்தவர் யார்? சாதாரணமான முஸ்லிம் ஜனங்கள் அல்லர். இஸ்லாம் என்னும் பதத்திற்குச் சாந்தி, சமாதானம் என்பது பொருள். அதனுல் உண்மையாக இஸ்லாம் மதத்தை அனுஷ்டிப்பவர்களும் லாபம் அடையவில்லை. ஸலாம்-ஆ-லேகும் என்று முஸ்லிம்கள் கூறும் வணக்க மொழிகளின் அர்த்தம், தங்களுக்குச் சாந்தி உண்டாவதாக என்பதாகும். வாழ்வில் பலாத்காரத்தையும் உபயோகிக்கவேண்டிய சந்தர்ப்பங்கள் உண்டாகலாம். ஆனல் பத்திரிகைகளில் வரும் செய்திகளை நம்புவதாய் இருந்தால், கல்கத்தாவில் காணப்படும் பலாத்காரம், அத்தகைய பலாத்காரமாகாது. எந்த விதமான பாகிஸ்தானத்தையும் முட்டாள்தனமாகப் பலாத்காரத்தை உபயோகிப்பதன் மூலம் பெற்றுவிட முடியாது. அறிவோடு பலாத்காரத்தைச் செய்ய முடியும் என்று வைத்துக்கொண்டுதான் அறிவில்லாத பலாத்காரம் என்று கூறுகிறேன். கல்கத்தாவில் நடப்பது அறிவோடு செய்யும் பலாத்காரத்துக்கான உதாரணமன்று. அறிவில்லாமல் செய்யும் பலாத்காரம் சாதிக்கக் கூடியதெல்லாம் அன்னிய அரசாட்சியின் வாழ் நாளை நீடிக்கச் செய்வதே யாகும். பிரிட்டிஷ் மந்திரி தூது கோஷ்டியார் இந்திய மகா ஜனங்களின் பிரதிநிதிகளிடம் அதிகாரத்தைச் சமாதான முறையில் மாற்றிக் கொடுக்க விரும்புகிருர்கள் என்று நான் நம்புகிறேன். ஆனல், நாம் பிரிட்டிஷ் துப்பாக்கியின் ஆதரவை நாடுவதா யிருந்தால் பிரிட்டிஷார் போக மாட்டார்கள். அவர்கள் போனுலும் வேறு ஒரு அன்னிய அரசாங்கம் வந்து புகுந்துவிடும். பிரிட்டிஷ் துப்பாக்கி உபயோகிக்கப்படும்போது எல்லாம்

“அறிவில்லாமல் செய்யும் பலாத்காரம் சாதிக்கக் கூடியதெல்லாம் அன்னிய அரசாட்சியின் வாழ்நாளை நீடிக்கச் செய்வதேயாகும்.” தமிழ் ஹரிஜனிலிருந்து எடுத்தது.

நம்மைப் பலாத்காரம் செய்யும்படி தூண்டுவதற்காகச் சில் துராத்மாக்களே வலி விடுகிறார்கள் என்று கூறுவது பெரிய தவருகும். அப்படிப்பட்ட துராத்மாக்கள் வேலே செய்வது உண்மைதான். ஆனால் அதையே சொல்லிக் கொண்டு நாம் விஷயத்தின் உண்மையை அறியாமல் ஏமாந்து போகக் கூடாது. கல்கத்தா நகரம் இப்பொழுது கொஞ்ச காலமாக அபகீர்த்தி அடைந்திருக்கிறது. சென்ற சில மாதங்களில் அங்கே பல தவருன ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றிருக்கின்றன. இந்த அபகீர்த்தி இப்படியே வளர்ந்துகொண்டு போகுமானல் கல்கத்தா அரண்மனை நகரம் என்று கூறப்படாமல் இறந்தோர் நகரம் என்றே கூறப்படும். கல்கத்தாவில் நடைபெறும் பலாத்காரம் அங்கேயே அழிந்து போகவேண்டுமென்றும் மற்ற ஊர்களுக்குப் பரவி விடக் கூடாதென்றும் ஆசைப்படுகிறேன். ஆனல், அது விஷயம் முஸ்லிம் லீக் தலைவர்களைப் பொறுத்ததாகும். ஆயினும் மற்றவர்களுக்கும் பொறுப் பில்லே என்று சொல்ல முடியாது. அவர்கள் பழிக்குப் பழி வாங்கலாம் அல்லது சும்மா இருந்துவிடலாம். மன உறுதி இருந்தால் சும்மா இருந்துவிடுவது சுலபமாகும். பழிக்குப் பழி வாங்குவது சிக்கலான விஷயம். பழிக்குப் பழி வாங்குவது என்ருல் ஒன்றுக் கொன்று பழி வாங்குவதா அல்லது ஒன்றுக்குப் பல பழி வாங்குவதா?



## நடத்துங்கள்!

பொருள்களின் இயற்கையை ஆராய்ச்சிசெய்ய, அறிவின் எல்லேயை விஸ்தரி; உனது நோக்கத்தில் சிரத்தையை ஊட்டு; மனத்தை ஒழுங்கு படுத்து; தன்மதிப்பை விருத்தி செய்; குடும்பத்தைக் கட்டி ஆள்; அரசாங்கத்தை நடத்து; உலகததைச் சமாதானப் படுத்து.

—ஸன் யாட் ஸென்.

## இல்லாமல் முடியாது

சரியான உடை வசதி இல்லாத மனிதன் கொஞ்ச காலத்துக்குச் சமாளித்துக் கொள்ள முடியும்; வீட்டு வசதி யில்லாத மனிதன் குகைகளில் வசிக்கலாம்; சரியாகக் கவனிக்கப் படாத யந்திரங்களும் வேலே செய்து வரலாம். ஆனல் எரி பொருள் இல்லாத யந்திரம் நின்று விடுகிறது; உணவு இல்லாத மனிதன் செத்து விடுகிருன்.

—கர்னல் ஸி. ஜி. விக்கர்ஸ்.

## இதய ஒலி

நிச்சயமாய் எந்த அக்னிப் பரீட்சைக்கும் நான் உடன்படத் தயார். என்னுடைய ஜாதியினர் செய்த எல்லா விதமான பாபங்களுக்காகவும் நான் பிராயச்சித்தம் செய்து கொள்ளுகிறேன். இதுவே எனக்கு அளவற்ற திருப்தியைக் கொடுக்கிறது. என் எண்ணங்களும், நான் பின்பற்றும் ஆதர்சமும் நீடூழி நிலவும். ஸ்வதேச நன்மைக்காக என் எண்ணத்தை நிறைவேற்றுவார்கள என்ற நம்பிக்கையினலேயே இந்த இடுக்கண்களேயும், அநீதிகளேயும் முகமலர்ச்சியுடன் சகித்துக் காலத்தைக் கழிக்கிறேன்.

—சுபாஷ் பாபு.

# செல்விகள் கல்லூரி

சுப. நாராயணன்

"'எண்ணித் துணிவதில் என்ன பிழை?' என்று எண்ணி, கலைமகள் கல்லூரி என்னும் பெயரில், ஆரம்ப விழாவை விரிவாக நடத்தக் கருதாது, அமைதியாக நடத்த எண்ணி, எனது அரிய நண்பர் இருவரை அழைத்தேன். அவ் விருவரும் பல வேலைகளினால் வர இயலாமையைத் தெரிவித்தார்கள். பின்னர் 5-9-1935 காலை ஒன்பது மணிக்குக் கொப்பனுபட்டி நகரத்தார் அவர்கள் தருமமாக, என் மேற்பார்வையில், மேன்மை தங்கிய புதுக்கோட்டை மகாராஜா அவர்கள் உதவியையும் கொண்டு, பதின்மூன்று ஆண்டுகளாகத் திருவருளால் இனிது நடைபெற்று வரும் மாணிக்கவாசகர் வித்தியா சாலை ஆசிரியரையும் மாணவர்களையும் அழைத்து வைத்துக் கொண்டு, என் இனிய நண்பர்களும் உறவினர்களுமாகிய அன்பர்கள் உதவிய ஏழு மாணக்கியர்களுடன் திருவருளை முற்கொண்டு இந்தக் குருகுலம் எங்கள் இல்லத்தில் தொடங்கப் பெற்றது."

என்று கொப்பனுபட்டிக் கலைமகள் கல்லூரியின் முதலாவது அறிக்கையில் (1939) இதன் தலைவர் அ. மெ. மெய்யப்பன் கூறுகிறார்.

இந்தக் கல்லூரியைப் பார்த்து வரவேண்டும் என்று எனக்கு நெடுநாளாக ஆசை. 28-6-46-ல் அந்த ஆசை நிறைவேறுவதற்கு ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்தது. காரைக்குடியி லிருந்து கொப்பனுப்பட்டி போய்ச் சேருவதும் ஹாஜ் யாத்திரை போவது போன்ற சிரமமான காரியமே என்றும் தெரிய வந்தது. இருந்தாலும், போய்த் தீருவது என்று முடிவு செய்தோம். விழா நாளன்று, கொதிக்கும் வெயிலில், சாப்பாட்டு நேரம் கடந்து, கல்லூரி வந்து சேர்ந்தோம். ராஜோபசாரங்களுக் கிடையே சாப்பாட்டை ஒருவாறு முடித்துக் கொண்டு, பிறகு, வந்த காரியத்தில் ஈடுபடலானோம்.

மெய்யப்ப செட்டியாரின் நெருங்கிய உறவினரும், எனது பழையநண்பருமானசோமையா, எல்லா இடங்களுக்கும் எங்களை இட்டுச் சென்று, விவரங்கள் சொன்னார். மாலை நிகழ்ச்சி தொடங்குவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பே, கல்லூரி விழா மைதானத்தில், அலங்காரமாய் ஆடை தரித்த சிறுமிகளும், இளம் பெண்களும், தாய்மாரும், சிறுவரும், இளைஞரும், பெரியவர்களும், சிலப்பதிகாரத்தில் வரும் கலை விழாவிற்கு வந்திருப்பவர்களைப் போல, மைதானம் எங்கணும் உல்லாசமாய் உலாவித் திரியத் தொடங்கிவிட்டார்கள்.

பட்டணங்களில் பாதிப் பட்டினி வாழ்வு நடத்தி வரும் எங்களைப் போன்ற பலர் அங்கு வந்திருந்தார்கள். பசி வேளையில், கண் மண் தெரியாமல், இலையில் படைத்த சுவையான உண்டியைப் பொறுக்க உண்டுவிட்டதால், என்னைப்போல் இன்னும் எத்தனை பேருக்கு வயிற்றுக்குள் உள்நாட்டுக் கலகம் நடந்ததோ, தெரியாது. கலகம் ஒருவழியாய் அடங்கப்போகிற சமயத்தில், சிற்றுண்டிக்கு அழைக்க வந்து

காலத்துக்கு ஏற்ற, பயனுள கல்வி அறிவைப் பெண்மக்களுக்குப் போதித்து வரும் மகளிர் கல்லூரிகளில் கொப்பனுபட்டி கலைமகள் கல்லூரி முக்கியமானது. அதன் வளர்ச்சி நாட்டுக்கு வள மளிக்கும்.

விட்டார்கள். சாப்பிடுவதற்குக் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தைக் கைநழுவவிட மனமில்லை; வயிறோ ஒத்துழையாமை செய்தது: என்ன செய்வது? வழக்கம் போல் மனம்தான் போராட்டத்தில் வென்றது. பின்னர், விழா நிகழ்ச்சி தொடங்கியதும், வயிறு, அறிவு எல்லாம் ஏகோபித்துச் சக்திச் செல்விகளின் வசம் திரும்பின. சிறுமிகளின் கோலாட்டம், பெரிய பெண்களின் பாட்டு முதலியவைகளுக்குப் பிறகு, வழக்கம் போல் சொற்பொழிவுகள் நடந்தன. ஆறுமுக நாவலர் என்ற பேச்சாளர் சமயம், தத்துவம், சமூகம், ஹாஸ்யம் ஆகிய பல சங்கதிகளைக் கடல் மடை திறந்த மாதிரி கதம்ப இடிமுழக்கம் செய்யத் தொடங்கியதும், சபை முழுவதும் வயிறு குலுங்கச் சிரித்த சிரிப்பில் அஜீரணம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போயிற்று. பின்னால், விழாத் தலைவர், புதுக்கோட்டைச் சமஸ்தானக் கல்வித் துறைத் தலைவர், கே. ஆர். வேங்கடராமய்யர் தமது முடிவுரையில் கவிதையைப் பற்றிக் கிளப்பிய பிரச்னைகள் சபையோருடைய பசிப் பரபரப்பைக் கிளறி விட்டன. நண்பர் சா. கணேசனின் சிம்ம கர்ஜனை அறிவுப் பசியோடு வயிற்றுப் பசியையும் அகோரமாகக் கிளப்பிவிட்டது. நிலைமை இன்னும் சற்று நேரம் நீடித்திருக்குமானால், கல்லூரி விழா கவிதைப் பட்டி மண்டபமாக மாறிவிடுமோ என்றுகூடச் சிலர் எண்ணினர். அப்போது, ஆண்களின் சண்டையைச் சமரசப்படுத்த நான்கு அழகிகள், காலில் சதங்கை கட்டி, கையில் முத்திரை பிடித்து, தோடி ராகத்தில் இசைத் தமிழ் பாடி, திருமகள் அவதாரமாகச் சபை நடுவில் காட்சியளித்தார்கள். அவர்களுடைய ஆட்டத்தில் ஊழிக் கூத்தாடிய அம்பலவாணனின் அற்புதமான மெய்ப்பாட்டு அழுத்தம் இல்லை யென்று சிலர் சொல்லலாம். ஆனால், வாழ்க்கையில் ஊடுருவி நிற்கும் இன்பச் சுவையை இந்தச் செல்விகள் நயமாக உணர்த்தி, இல்வாழ்வு செம்மைப்பட வழி இன்னது தான் என்பதைப் புலமாக வைத்து நடம் புரிந்ததை எல்லாரும் ரசித்தார்கள் என்பதை ஒவ்வொருவருடைய முகமலர்ச்சியும் காட்டிற்று.



தலைவர்
ஸ்ரீ அ. மெ. மெய்யப்ப செட்டியார்

தனவணிகர்களில், பெண் மக்களின் அறிவு வளர்ச்சியில் தீவிரமாக, நேரடியாக ஈடுபட்டவர்கள் இருவர்: ஒருவர் குமரன் பத்திராசிரியர் சொ. முருகப்பா. மற்றவர், கலைமகள் கல்லூரி ஸ்தாபகர் அ. மெ. மெய்யப்ப செட்டியார். கல்லூரி முறையில் செட்டியார் பெண்களுக்கு என்று தனியாக உள்ள கல்லூரி, கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரி ஒன்றுதான். தன் சொந்தப் பெண் மக்களையே ஒன்று சேர்த்து வைத்திருப்பது



தலைவி
ஸ்ரீமதி மெ. நாச்சம்மை ஆச்சி

சுலப மல்ல. இருநூறு முன்னூறு பெண்களை ஒன்ருக உண்டு, உறங்கி, படித்து, பாடி, விளையாடி, அளவளாவி வரும் படி செய்வதென்பது எவ்வளவு சிரமமான காரியம் என்று சொல்லத் தேவையில்லை. இந்தக் காரியத்தை மெய்யப்ப செட்டியார் செய்ய முடிந்ததற்குக் காரணம் அவரது மனைவி நாச்சியம்மைதான். மெய்யப்பனும் நாச்சியம்மையும் கல்லூரிக் குழந்தைகளுக்கு மெய்யாகவே அப்பனும் அம்மையுமாக இருந்து வருகிருர்கள். கல்லூரியின் ஆண்டு அறிக்கைகளைப் பார்க்கும்போது இவ்வளர்ச்சி எப்படி உண்டாயிற்று என்று தெரியவருகிறது. தொடக்க முதலே, செட்டியார்களுக் குரிய சிறப்பியல்புப்படி, நண்பர் மெய்யப்பன் தீர்க்க தரிசனத்துடன் திட்டம் போட்டு வேலை செய்து, இடையருது உழைத்து வந்திருக்கிருர் என்பது புலனுகிறது. வெளிநாட்டிலுள்ள நகரத்தார்கள் வேண்டுகோளின்படி, 1937-ல் மலேயா, பர்மா, மைடான் டில்லி முதலிய இடங்களுக்குச் சென்று 74,000 ரூபாய் வசூலித்து வந்திருக்கிருர். நாச்சியம்மை ஆச்சி, தொடக்கத்திலேயே கட்டிடம் கட்டும் வகைக்கு இரண்டாயிரம் ரூபாய் வழங்கி யிருக்கிருர். கானுடுகாத்தான் சா. ராம. அரு. ராம. ராமனுதன் செட்டியார் "கலைமகள் கல்லூரியில் கலைச்செல்வி கலைமணி வகுப்புவரை கற்றுத் தேர்ச்சி யடைவதற் கென்று நான்கு மாணுக்கியர்க்கும், செக்காலை மெ. ரா. மெ. மெய்யப்ப செட்டியார் இரண்டு மாணுக்கியர்க்கும் உபகாரச் சம்பளம் உதவ இசைந் திருக்கிருர்கள்." மெய்யப்ப செட்டியார் தமது சொந்தப் பணத்தில் ரூ. 29,000 கல்லூரிக்குக்கொடுத்திருக்கிருர். ராஜா சர் அண்ணுமலை செட்டியார் கலைச் செல்விப் பரிசுப் பதக்கத்திற்காக ஆயிரம் ரூபாய் வைப்புத் தொகையாக வழங்கியிருக்கிருர். இன்னும் எத்தனையோ தனவணிகப் பெண்மணிகளும், பெரியார்களும் தாராளமாக நன்கொடை வழங்கி யிருக்கிருர்கள்; இன்னும் வழங்கி வருகிருர்கள்.

மூன்று எக்கர் விஸ்தீரணத்தில் ரூ. 1,33,000வரை செலவு செய்து, வெகு அழகான முறையில், விசாலமான கட்டிடங்கள் கட்டியிருக்கிருர்கள். இரண்டாம் வகுப்பிலிருந்து எட்டாம்வகுப்பு வரையும், அதற்குமேல் கலைச் செல்வி, கலைமணி வகுப்புக்களும் இருக்கின்றன. தமிழ், கணிதம், பொது விஞ்ஞானம், தாய் நாட்டுச் சரித்திரம், பூகோளம், ராஜாங்க முறை நூல், குடும்ப சாஸ்திரம் ஆகிய எல்லாப் பாடங்களும் தமிழிலேயே போதிக்கப் பெற்று வருகின்றன. நான்காம் வகுப்பு முதல் ஆங்கிலப் பாடமும் கற்பிக்கப் பெறுகிறது. பாடங்

கள் எல்லாம் உயர்தரக் கலா சாலை முறைக்கு உரிய மாதிரியே நடத்தப்பெற்றாலும், பெண்களுக்குச் சிறப்புத் தரும் சங்கீதம், தையல், பின்னல், குடும்ப சாஸ்திரம் ஆகியவைகளில் அதிகமான கவனம் செலுத்துகிறார்கள். தமிழ் இலக்கணம், இலக்கியம் இரண்டிலும் குழந்தைகள் ஆழ்ந்த பயிற்சி பெற்று இருப்பதாகத் தெரிகிறது. கலைச் செல்வி வகுப்பில், சென்னைச் சர்வ கலா சாலை வித்வான் தொடக்க நிலைத் தேர்தலுக்கு வைத்துள்ள தமிழ் இலக்கணம், இலக்கியம், ஆங்கிலம் முதலிய ஒரு வருஷப் பாடத் திட்டம் பின்பற்றப்பெற்று வருகிறது. வகுப்பில் தேறியவர்களுக்குப் பரிசும், பத்திரமும் வழங்குகிறார்கள். கலைச்செல்விகள் அண்ணாமலை நகர்ச் சர்வகலா சாலைப் புலவர் வகுப்பில் சேர்ந்து பயிலத் தகுதி யுடையவர்கள் என மேற்படி சர்வ கலாசாலையார் 30—9—44-ல் தீர்மானித்திருக்கிறார்கள். 1946 முதல் கலைமணி வகுப்பு ஒன்றும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதன் பாடத் திட்டம் சென்னைச் சர்வகலா சாலை முன்னேற்பாட்டுநிலைப் பாடத் திட்டத்தைப் பின்பற்றுகிறது. இதற்கு இரண்டு வருஷம் படிக்க வேண்டும். எல்லாக் குழந்தைகளுக்கும் வாய்ப்பாட்டும், சங்கீதப் பண் முறைப் படி தேவாரமும் கற்பிக்கிறார்கள். விசேஷமான சங்கீதப் பயிற்சி பெற விரும்பும் குழந்தைகளுக்கு வீணை சொல்லித் தருகிறார்கள். இப்போது, பதினைந்து பெண்கள் வீணை பயின்று வருகிறார்கள்-காலை ஐந்து மணிக்கு எழுந்தது முதல், இரவு ஒன்பது மணிக்குத் துயிலச் செல்லுகிற வரைக்கும், பாடங்களைச் சிந்தித்தல், உடற் பயிற்சி, நீராடுதல், பிரார்த்தனை, சிற்றுண்டி, வருப்புப் பாடங்கள் நடைபெறுதல், பகல் உணவு,

கல்லூரியின் தோற்றம்

மீண்டும் வகுப்புப் பாடங்கள் நடைபெறுதல், சிற்றுண்டி, விளையாட்டு, பிரார்த்தனை, பாடங்களைச் சிந்தித்தல், இரவு உணவு இவை அனைத்துக்கும் நிகழ்ச்சி முறை வகுத்திருக்கிறது. சிறு பெண்கள் இந்தமாதிரி உடை அணிய வேண்டும், பெரிய பெண்கள் இந்தமாதிரி உடை அணிய வேண்டும், தலைமயிரை இன்ன படி வாரிக் கொள்ள வேண்டும், வைர மல்லாத காதோலை தவிர மற்ற நகைகள் அவசிய மில்லை, இன்ன துணி மணி, படுக்கைகளை வைத்திருக்க வேண்டும்—என்றெல்லாம் சட்ட திட்டங்கள் உண்டு. ஐந்தாம் வகுப்புவரை ஆறு மாதத்துக்கு ஒரு முறை பரீட்சை நடக்கும். கலைச் செல்வி வரை உள்ள மற்றவகுப்புகளுக்கு ஒரு வருஷப் பரீட்சை. பிரவேசக் கட்டணம் குழந்தைக்கு ரூ. 3. வகுப்புக் கட்டணம் ஒன்று முதல் ஐந்து வரை ரூ 6—14—0. 6, 7, 8, வகுப்புக்களுக்கு ரூ. 13—12—0. உணவு, இருக்கை, வைத்திய வசதி, வண்ணான் கூலி இவைகளுக்கு மாதம் இருபது ரூபாய். வீணை வகுப்புக் கட்டணம் மாதம் ஒன்றுக்கு ரூ 5. இரவில் உணவுக்குப் பிறகு தின சரி உழக்குப் பசுவின் பால் தர, மாதம் ஒன்றுக்கு இரண்டரை ரூபாய் கொடுக்க வேண்டும். வருஷத்துக்கு ஒரு முறை ஒரு மாதம் (மே மாதம்) விடுமுறை உண்டு. அந்த மாதத்திற்கு எவ்விதக் கட்டணமும் கிடையாது. எல்லாரும் மரக்கறி உணவு தான் சாப்பிடவேண்டும். தற்சமயம் இருநூறு குழந்தைகள் கல்லூரியிலேயே தங்கிக் கல்வி கற்று வருகிறார்கள். காரியாலயக் கட்டிடம், கல்லூரிக் கட்டிடம், மாணுக்கியர் உறையுள், பிரார்த்தனை இல்லம், உண்டிச் சாலை, அடுக்களை, நீராடுமிடம், வைத்திய சாலை, ஆசிரியர்கள்

மகளிர் விடுதி

இருக்கை, விருந்தினர் தங்குமிடம், விளையாட்டு இடம், பால் பண்ணை எல்லாம் இருக்கின்றன. வனப்புமிக்க முறையில் அமைந்த பிரார்த்தனை இல்லத்தில் வெள்ளைப் பளிங்கினால் சமைத்த கலைத் தேவி கோவில்கொண் டிருக்கிறாள். அவளைச் சுற்றிலும் அறிஞர்கள், ஞானிகளின் உருவப் படங்கள் திகழ்கின்றன. ரேடியோ வைத்திருக்கிறார்கள். திருக்கொன்னை மரங்கள் நாலாபுறமும் பசிய காட்சி யளிப்பதோடு, நடு நடுவில் வண்ண மலர்களையும் நடை பாதைகளில் தூவிக்கொண் டிருக்கின்றன.

இத்தகைய இனிய சூழ்நிலையில் வாழ்ந்து, கற்புப் பண்பில் செறிந்து, கலைச் செல்விகளாகவும், கலைமணிகளாகவும் ஆவதற்கு எந்தப் பெண்தான் விரும்ப மாட்டாள்? இந்தக் கல்லூரியைப் பார்வையிட்ட பெரியார்களெல்லாம் இதை வெகுவாகப் பாராட்டி யிருப்பதில் ஆச்சரியமே யில்லை. 1939-ல் இதைப் பார்வையிட்ட மகாமகோபாத்யாய சிதம்பரம் தண்டபாணி தீட்சிதர் அவர்கள், தாமும் ஒரு பெண்ணாகப் பிறந்து இங்கே படிக்கும் பாக்கியம் பெறவில்லையே என்று வருந்தி யிருக்கிறார். ஆனால், கல்லூரியில் கலைச் செல்வி, கலைமணி ஆகிய வகுப்புகளுக்கு வைத்திருக்கும் பாடத் திட்ட விவரத்தை படித்ததும் எனக்கு அந்த மாதிரி ஆசை வரவில்லை. ஒரு சில பெண்களிடமாவது நேரடியாகக் கேள்வி கேட்டு, அவர்களுடைய இலக்கண இலக்கிய அறிவைப் பரிசோதித்துப் பார்க்க நான் எண்ணினேன். என் நண்பர் மகளொன்றும் அங்கே படித்து வருகிறது. அந்தக் குழந்தையின் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். அதனுடன் பேசிப் பார்த்தேன். மேற்கொண்டு மற்றக் குழந்தைகளிடம் நெருங்க எனக்குத் துணிச்சல் வரவில்லை. நான் ஏதாவது கேட்டுவைத்து, அந்தச் சக்திகள் 'மா முன் நிறை, நிறை முன்நேர் தேமாங்காய் புளிமாங்காய் கருவிளங்காய், கூவிளங்காய், வெண்டளை' என்று யாப்பருங்கலக் காரிகையராய்க் கிளம்பி, அணி இலக்கணப் பிரச்னைகளை என்முன் தூக்கிப் போடத் தொடங்கி விட்டால், எனது கம்பராமாயணப் பால காண்ட நிலைமை கலிங்கத்துப் பரணியாக ஆகி, அழகர் கலம்பகமாகக் குழம்பி, சேரன் செங்குட்டுவன் கதியில் முடிந்தால், ஆணினத்துக்கு அது ஒரு அபகீர்த்தியாகு மல்லவா? அதனால் நான் வெற்றிகரமாக வாபஸ் வாங்கிக் கொண்டேன்.

இதுவரை தேறி வெளி வந்துள்ள ஐம்பது கலைச் செல்விகளில், மணம் முடிந்த பல செல்விகள் தங்கள் வாழ்க்கைத் துணைவர்களுக்குத் தமிழ்ப் பாடம் கற்றுக் கொடுப்பதோடு நில்லாமல், 'செல்விகள் சங்க' மொன்று அமைத்துக் கொண்டு அக்கம் பக்கத்தி லுள்ள பெண்கள் குழந்தைகளுக்கு அறிவுத் தொண்டு செய்ய முனைந் திருப்பதாகவும் அறிந்து மகிழ்கிறேன். கலைச் செல்விகளும் கலைமணிகளும் ஒவ்வொரு குடும்பத்திலும் இதர செல்வங்களோடு, மணி மணியான கலைச் செல்வங்களையும் அமோகமாகப் பெருக வைப்பார்களாக! இந்த நல்ல அறப்பணியில் ஈடுபட்டு, சலியாமல் உழைத்துவரும் கல்லூரி ஆசிரியைகள் ஆசிரியர்களும், தலைவி, தலைவர் ஆகிய அம்மையப்பனும் நீடூழி வாழ்க!

# ரகசியம் வேண்டாம்

புரொபஸர் என். எஃப். மோட்

தங்களுடைய விஞ்ஞானப் புதுமைகள் உலகில் ஒவ்வொருவனுக்கும் பயன்பட வேண்டும்: தனியொரு நாட்டுக்கு மட்டும் பயன்படுவது கூடாது என்று தான் பெரும்பான்மையான விஞ்ஞானிகள் விரும்புகிறார்கள். விஞ்ஞானத் துறையில் நிலவும் ரகசியங்கள் நாடுகளுக்கிடையே உள்ள நல்லுறவில் நஞ்சூட்டுகின்றன. விஞ்ஞானி தன் முடிவை வெளியிடும் உரிமையை வற்புறுத்துவதன் மூலம் விஞ்ஞான வளர்ச்சியில் உதவுவதோடு உலகத்துக்கும் உதவ முடியும்.

அநேகர் இந்தக் கொள்கையை எதிர்க்கிறார்கள். அவர்களுடைய வாதத்தைப் பின் வருமாறு கூறலாம்.

“எந்த விஞ்ஞானியும் தான் கண்டுபிடித்த புதுமை உலகத்துக்கு ஊறு செய்வதற்கல்லாது, உதவவே உபயோகிக்கப்படும் என்று ஒருபோதும் நிச்சயங் கொள்ள முடியாது. அணுச் சக்தி போன்ற புதுமைகள் அவற்றை வைத்திருப்பவருக்கு அபாயகரமான பலத்தை அளிப்பதால், அவற்றை ரகசியமாகவே வைத்திருப்பது நல்லது. ஆராய்ச்சி நிலையங்களையும், அணுச்சக்தி உற்பத்திச் சாதனங்களையும் ரகசியமாக நிர்மாணிப்பதோடு அவற்றைச் சுற்றி முள்கம்பி வேலி போட்டு, ராணுவப் போலீசைக் காவல் வைக்க வேண்டும். அங்கு வேலை செய்யும் விஞ்ஞானிகள் ரகசியத்தை வெளியிட்டால், அவர்களைச் சிறையிட்டுவிட வேண்டும்.”

யுத்தக் காலத்திலோ, யுத்தம் நேரிடும் போல் தோன்றும் நெருக்கடியிலோ தான் இந்தக் கொள்கை சரியாகும்: நீ கண்டுபிடித்த ஒரு புதிய வெடி மருந்து அல்லது காந்த வெடி பற்றிய தகவல்களை உன் விரோதி அறியுமாறு விடுவது பைத்தியக்காரத் தனமாகும். சமர்தான காலமாகத்தான் இருக்கட்டுமே— பலாத்காரத் தாக்குதலை அஞ்சி நாமும் இதர நாட்டினரும் ஆதிக்க வெறிபிடித்த நாட்டிற்கெதிராக ஆயுத முஸ்தீப்புச் செய்யும் வரை, ஆயுதங்களின் அமைப்பு முறை பற்றிய வேலையை வெளிப்படையாகச் செய்ய வேண்டும் என்று யோசனை கூறுவதெல்லாம் நடக்காத காரியம். நாம் தளவாடங்கள் வைத்திருக்கும்வரை நம் ராணுவ ரகசியங்களை ஒரு சர்க்கார் ரகசியங்கள் சட்டத்தின் மூலம் காக்க வேண்டியதுதான்.

துரதிருஷ்ட வசமாக, யுத்தம் விஞ்ஞான மயமாக ஆக ஆக, ராணுவ உபயோகம் உள்ளவை என்று சொல்லக் கூடிய விஞ்ஞானப் பகுதிகள் விரிவடைகின்றன. இதன் விளைவாக, ஆயுதங்களின் அமைப்புப் பற்றியது தவிர்ந்த இதர ஆராய்ச்சித் துறைகளையும், தணிக்கை, தடைகள், ரகசியங்கள் எல்லாம் ஆக்கிர

---

விஞ்ஞான உலகில் ரகசியம் அவசியமா? இந்த முக்கியமான பிரச்னையைப் பற்றி அறிஞரைச் சிந்திக்க வைத்துள்ளது அணுக்குண்டு.

'விஞ்ஞான உலகில் ரகசியம் கூடாது. ஆராய்ச்சி முடிவுகளை அப்படியே வெளியிட விஞ்ஞானிக்குப் பூரண சுதந்தரம் வேண்டும்' என்று வாதிக்கிறார் இந்தக் கட்டுரையாளர்.



SIVAKAMI BOOKS

மித்து விட்டன. இந்த ஆக்கிரமிப்பை எதிர்த்தே பெரும்பான்மை விஞ்ஞானிகள் கிளர்ச்சி செய்கிறார்கள். இந்தக் கிளர்ச்சி பல வகைப்படும்.

ஆலன் நன் மே வழக்கை எடுத்துக் கொள்வோம். அவருக்கு விதிக்கப்பட்ட பத்து வருஷச் சிறைத் தண்டனை எங்கும் ஆழ்ந்த அனுதாபத்தைக் கிளப்பி விட்டிருக்கிறது. சர்க்காருக்காக வேலை செய்ய ஒப்புக்கொண்ட டாக்டர் மே அணுச்சக்தி சம்பந்தமான ரகசியங்களை ஒரு அன்னிய வல்லரசுக்கு—அது நேச நாடாகவே இருக்கட்டுமே—வெளியிட்டதன் மூலம் சர்க்காரோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தை முறித்துவிட்டார். அத்தகைய செய்கையை எந்த அரசாங்கமும் அனுமதிக்க முடியாது. பொறுப்புள்ள எந்த விஞ்ஞானியும் அதற்குச் சப்பைக்கட்டுக் கட்ட முடியாது. ஆனால், அந்தத் தண்டனையிலிருந்து இரண்டு விஷயங்கள் தெளிவாகின்றன. தங்கு தடையின்றி அறிவைப் பரப்புவதில் நாம் இன்னும் எவ்வளவு பின்னேக்கி இருக்கிறோம் என்பது கண் கூடு. தவிர, யுத்த யந்திரத்தின் ஒரு பெரும் பகுதியாகவே இன்னும் விஞ்ஞானம் இருக்கிறது.

தளவாட உற்பத்தியில் விஞ்ஞானம் ஈடுபடவேண்டி இருக்கலாம். ராணுவ பலம் மட்டுமே பிரதானமாக விளங்கும் ஒரு பேய் யுகத்தின் தொடக்கத்தில் நாம் இருக்கிறோமென்று வைத்துக் கொள்வோம். அப்போதுகூட பரந்த விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் ரகசியத் திரை போடுவது அறிவுடைமை ஆகாது.

ராணுவப் போலீஸ், முத்திரையிட்ட கடிதம், பத்து வருஷச் சிறைத் தண்டனை—இவைகளை ஒட்டிய சூழ்நிலையை விஞ்ஞான உலகில் புகுத்துவது விரும்பத் தக்க தல்ல. வெற்றி தரும் ஆயுதங்களை நெருக்கடிக் காலங்களில் சமைப்பதில் நமக்குள்ள திறமை, சுறுசுறுப்பும், எதையும் நுணுகி ஆராயும் கூர்மதியும் படைத்த விஞ்ஞானிகள், தொழில் துறை நிபுணர்கள் — இவர்களையே பொறுத் திருக்கிறது. எங்கு எதை அவர்கள் கற்க விரும்பினாலும் அதற்குத் தடை இருக்கக் கூடாது. சகபாடிகளுடைய விமர்சனங்களால் அவர்களுடைய அறிவு கூர்மையடைய வசதி வேண்டும். அத்தகைய சாதகமான சூழ்நிலையில் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். புத்திசாலியான பிரதம ராணுவ அதிகாரி சமாதான காலத்தில் குறைந்தபட்ச ரகசிய நிலையையே விரும்புவான். போட்டி அரசுகளுக்குத் தகவல் போய்ச் சேர்ந்துவிடுவதால் ஏற்படும் தீமையைவிட, ஒரு நாட்டின் விஞ்ஞான வாழ்வில் சுதந்தரம் நிலவுவதால் ஏற்படும் அதிகரித்த வீர்யமும், வன்மையும் வரவேற்கத் தக்கதே.

நாடுகளுக் கிடையே நல்லுறவை ஏற்படுத்தி இன்னொரு யுத்தம் மூளாது தடுக்க வேண்டும். இதை மனதில் பதித்துக் கொண்டே விஞ்ஞான உலகில் ரகசியம் காப்பது நல்லதா என்பதைத் தீர்மானிக்க வேண்டும். சென்ற வருஷத்தில் சர்வதேச நல்லுறவை அணுக்குண்டு பாழ்படுத்திவிட்டது. அதன் வளர்ச்சி பற்றி நிலவிய மர்மம் நிலைமையைப் பின்னும் மோசமாக்கி விட்டது. தீமை என்னவோ நிகழ்ந்துவிட்டது. அணுக்குண்டு பற்றிய விவரத்தை யூனே சபையிடம் அமெரிக்கா

அறிவித்துவிடும் என நாம் எதிர் பார்க்க முடியாது.

வருங்காலத்தில் இந்தத் தீமையைக் கட்டுப்படுத்துவதே நாம் இனிச் செய்யவேண்டிய தாகும். அணுக்குண்டு கட்டுப்பாடு விஷயமாய் அமெரிக்க ராஜாங்கக் காரியதரிசிக்கு ஆலோசனையாளர் சங்கமொன்று விடுத்துள்ள அற்புதமான திட்டம் குறிப்பிடத் தக்கது. இந்தத் திட்டப்படி அணு வளர்ச்சி ஸ்தாபனம் ஒன்று ஏற்படுத்தப்படும். எல்லா நாடுகளிலும் அணுக்குண்டின் மூலப்பொருள்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் எல்லாம் இந்த ஸ்தாபனத்தின் அதிகாரத்தின் கீழ் இருக்கும். எல்லா நாடுகளையும் சேர்ந்த விஞ்ஞானிகள் இந்த ஸ்தாபனத்தின் அதிகாரிகளாக இருப்பார்கள். யந்திர சக்தி வளர்ச்சிக்கும், இதர பயனுள்ள காரியங்களுக்கும் ஏற்ப, யந்திர சாதனங்களை அடிக்கடி இவர்கள் சீர்திருத்துவார்கள். ராணுவ உபயோகங்களையும் இவர்கள் தங்கள் அதிகாரத்தின் கீழ் வைத்திருப்பார்கள். அணுச்சக்தி பிரயோக விஷயமாக வேறு எந்த வெளிக் கழகமும் கனவிலும் எதிர்பார்க்க முடியாத அனுபவமும், திறமையும் அவர்களிடம் இருக்கும். இந்த நிலையில் எதையும் ரகசியமாக வைத்திருக்க வேண்டியதே யில்லை.

இந்த ஸ்தாபனத்தை மீறி எவரேனும் அணுக்குண்டு தயாரிக்க முற்பட்டால் அவர்களுடைய நடவடிக்கைகளைச் சரியானபடி கண்காணிக்கவோ, தடுக்கவோ அந்த ஸ்தாபனத்தால் நன்கு முடியும்.

அணுக்குண்டு விஷயமாய் இன்று உலக முழுமையும் காட்டி வரும் சிரத்தையைக் கொண்டு அத்தகைய ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தக் கூடுமானல், சர்வதேச ஒத்துழைப்பு சம்பந்தப் பட்டமட்டில் அது ஒரு முன்னேற்ற நடவடிக்கை யாகும்.

விஞ்ஞானிகள் எப்போதுமே சர்வதேசத்தொடர்புள்ளவர்கள். அவர்கள் ஒருவரோ டொருவர் சகஜமாகவும் சமத்துவ பாவத்தோடும் பழகிவந் திருக்கிருர்கள். தாராளமான விஞ்ஞானக் கூட்டுறவு இருந்திருந்தால் விஞ்ஞானிகள் இன்னெரு யுத்தம் வராது தடுக்கமுடியும் என்பது வீண் பேச்சு. போன யுத்தத்தை அவர்கள் தடுத் திருக்கமுடியும் என்று சொல்வதும் இப்படித்தான். ஆனல், விஞ்ஞான வளர்ச்சியோடு கூடவே—அணுக்குண்டு போன்ற ஆயுதங்களோடு—சமூகத்தில் விஞ்ஞானிகளின் பலமும் செல்வாக்கும் அதிகரித் திருக்கின்றன. அவை பின்னும் அதிகரிக்கலாம். அவர்கள் தங்கள் பலத்தையும் செல்வாக்கையும் சமாதானத்தை நிலை நாட்டுவதில் செலவிட வேண்டும். சர்வதேச ஸ்தாபனங்கள் ஏற்படும்போது அவர்கள் அவற்றில் சேர்ந்து, முழுமனதுடன் ஒத்துழைக்க வேண்டும்.

ஆராய்ச்சிகளின் முடிவுகளை அனைத்துலகும் பங்கிட்டுக் கொள்ள முடியும்போதுதான் சர்வ வல்லமை யுள்ள சர்வதேச விஞ்ஞானிகள் சங்கம் ஏற்படுவதும் சாத்தியமாகும்.



பலேத் திருடர்கள்!:—வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள், உங்கள் உயிர் அல்லது பணம் ஆகிய ஏதாவ தொன்றைத்தான் கேட்கிருர்கள். ஸ்திரீகளுக்கோ இரண்டுமே தேவையா யிருக்கின்றன. —சாமுவேல் பட்லர்

# சுதந்தரம் கூடாது

பெர்ட்ரண்டு ரஸ்ஸல்

டாக்டர் ஆலன் நன் மே தண்டனை யடைந்தது விஷயமாய் எழுந்துள்ள பிரச்னையில் குழப்பமே அதிகம் காணப்படுகிறது. விஞ்ஞான ஆராய்ச்சியில் ரகசியம் இருக்க வேண்டியது தானா என்ற விஷயம் அவர் விசாரணைக்குச் சிறிதும் பொருத்தமானதல்ல. சர்க்காருக்காக ஏதோ ஒரு வேலையை மேற்கொண்ட அவர் சர்க்கார் ரகசியங்கள் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவராகிறார். மனச்சாட்சிக் காரணங்களுக்காக மனிதர்கள் தங்கள் உறுதிமொழிகளை உடைத்தெறிய நேர்ந்தால், பிறகு பொது வாழ்வேது? பிரத்தியேக வாழ்வுதான் சாத்தியமா? சர்க்கார் கீழ் வேலை செய்ய ஒப்புக்கொள்ளாதிருந்திருக்கலாம். அல்லது ராஜிநாமாச் செய்திருக்க வேண்டும். ஆனால், புனிதமான வாக்குறுதியை மீறுவது தகாத செயலேயாகும். அவருக்குக் கிடைத்த தண்டனை கடுமையானதென்று சொல்லலாம். ஆனால், அவரைத் தண்டிக்காமலே விடுவதற்கில்லை. அவர் தன் மனச்சாட்சி கூறியபடி நடந்தார் என்றால், அந்த மாதிரி மனச் சாட்சியைச் சரியென்று என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது.

விஞ்ஞான ஆராய்ச்சியில் ரகசியம் இருக்கவேண்டுமா என்பது அலாதியான விஷயம். அணுக் குண்டு பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தவர்கள் இது சம்பந்தமான எல்லா விவரங்களையும் உலகத்துக்கு வெளியிட்டு விட வேண்டும் என்கிறார்கள், ஜெர்மனியும், ஜப்பானும் தோற்கடிக்கப்படாமல் இருந்தபோது, அவர்கள் இந்தக் கொள்கை கொண்டிருந்திருக்க மாட்டார்கள். லண்டனையும் நம்முடைய இதர பெரிய நகரங்களையும், ஜெர்மனி நாசம் செய்வதற்கு அமெரிக்கா வழிகாட்டி உதவியிருக்க வேண்டும் என்று அவர்கள் எண்ணியிருக்க முடியாது. ஆகவே, அணுக்குண்டு பற்றிய அறிவைப் பிரசுரிக்க வேண்டும் என்ற கோரிக்கையைச் சமாதான காலக் கோரிக்கையாகவே நாம் கொள்ள வேண்டும். அப்படி இருந்தாலும்கூட அதற்கு நியாயமே கிடையாது. சமாதானம் என்றும் நீடிக்கும் என்று நம்ப முடியாது. எவ்வளவுக்கு அணுக்குண்டு விஷயமாய்ப் பெரிய வல்லரசுகளிடையே சமத்துவம் இருக்கிறதோ, அவ்வளவுக்கு சமாதானம் நிலையாயிராது. அணுக்குண்டு வைத்திருப்பதையும், அதை உற்பத்தி செய்வதையும் ஒரு சர்வதேச ஸ்தாபனத்திடம் விட்டுவிட வேண்டும். இதுதான் நம் லட்சியமாயிருத்தல் வேண்டும்.

யூனோவை இத்தகைய ஸ்தாபனமாகக் கொள்ள முடியாது. ஒவ்வொரு வல்லரசுக்கும் நிராகரிக்கும் உரிமை இருக்கும்வரை, யூனோ ஒரு சர்ச்சைக் கூடமாகவே இருக்கும். அமெரிக்கா கையில்தான் இப்போது அணுக்குண்டு ரகசியம் இருக்கிறது. அமெரிக்கா இதை நன்கு பயன்

---

*விஞ்ஞான சுதந்தரத்தைப் பற்றிய போன கட்டுரையில் படித்தீர்கள். அதன் எதிர்வாதத்தை—விஞ்ஞான ரகசிய வாதத்தை—இந்தக் கட்டுரையில் காணலாம்.*

**இந்த இரு கட்டுரைகளும் பிக்சர் போஸ்ட் என்ற வாரப் பத்திரிகையில் வெளி வந்தவை.**

படுத்திக் கொள்ளலாம். ஒரு சர்வ தேச ஸ்தாபனத்திடம் அணுக்குண்டு ரகசியத்தை ஒப்படைப்பதில் எல்லா நாடுகளினுடைய சம்மதத்தையும் பெறும் வகையில் அமெரிக்கா தன்னுடைய இந்த வசதியான நிலையைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். பயத்தினால் அல்லாது எந்தவித சர்வதேசக் கட்டுப்பாட்டிற்கும் ருஷ்யா உடன்படாதென்பது நிச்சயம். ருஷ்யாவின் பயத்தைத் தணித்துவிடக் கூடிய எந்த நடவடிக்கையும் அணுக்குண்டைச் சர்வதேசப் பொதுவுடைமை ஆக்கும் முயற்சியைத் தடை செய்யவே செய்யும்.

ரகசியமாக வைத்திருக்க வேண்டுமென்பதை எதிர்ப்பவர்கள் ருஷ்யாவின் ஒத்துழையாத் தன்மைக்கு அதனுடைய பயங்களும் சந்தேகங்களும்தான் காரணம் என்கிறார்கள்.

கடந்தகால பயங்களும், சந்தேகங்களும் சேர்ந்து இன்றைய ஒத்துழையாத் தன்மையை உண்டுபண்ணி இருக்கலாம். ஆனால், அதன் இன்றையப் போக்கில் பயம் காண வில்லை. அது ஏகாதிபத்தியப் போக்காகவே இருக்கிறது. பாரசீகத்தைக் கண்டு ருஷ்யா பயப்படுவதாக நடிப்பதெல்லாம் வெறும் பாசாங்கு. சந்தர்ப்பங்கள் மட்டும் சாதகமாக இருந்துவிடுமானல், ருஷ்யா அடுத்த 'உலக ஆட்சி'ப் போராட்டத்தைத் தொடங்கிவிடுமென்பதற்கு எல்லா அறிகுறிகளும் உள்ளன. நாம் ஏன் அதன் வேலையை இன்னும் சுலபமாக்க வேண்டுமென்பதுதான் எனக்கு விளங்கவில்லை.

விஞ்ஞான ஆராய்ச்சித் துறையில் ரகசியம் கடைப் பிடிப்பது சம்பந்தப்பட்ட பொதுப் பிரச்னையில் நாம் ஒரு முக்கியமான விஷயத்தை முதலில் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். எதுவரை சுத்த விஞ்ஞான அறிவு—எந்தப் பகுதி ராணுவச் செயல் முறை பற்றியது என்ற வேறுபாட்டைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். இது சுலபமான காரிய மல்ல. ஆனலும் இப்படிச் செய்வதைத் தவிர வேறு வழி இருப்பதாகத் தெரிய வில்லை.

இயக்க வியலில் கலிலியோ கண்ட புதுமைகள் சுத்த விஞ்ஞானத்தின்பாற் படும். ஆனல், இந்த ஆராய்ச்சி அறிவுகள் பிரபுவின் பீரங்கிப் படையை அபிவிருத்தி செய்ய உபயோகிக்கப் பட்டது.

மூல அணு பற்றிய ஆராய்ச்சி நெடு நாளாகவே நடந்து வருகிறது. போர் முறையில் அதன் முக்கியத்துவம் தெரிவதற்கு முன்பிருந்தே இந்த ஆராய்ச்சி நடக்கிறது. அதன் முடிவுகளை விஞ்ஞான உலகமறிய இன்னமும் வெளியிடாது வைத்திருப்பது வருந்தத் தக்கதே. விஞ்ஞானச் சுதந்தர மென்று சொல்லிக் கொண்டு விஞ்ஞானிகள், நம்மையெல்லாம் மின் ஆற்றல் அணுவாயுக்களாக மாற்றும் அமைப்பு முறையைப் பூரணப் படுத்தும் வரை, நம்மைச் சும்மா விருக்கும்படி சொல்ல அவர்களுக்கு உரிமை கிடையாது. துரதிருஷ்டவசமாக விஞ்ஞான அறிவு இப்போது தேசிய அரசாங்கங்களின் கைகளில் சிக்கிக் கிடக்கிறது. தேசிய லட்சியத்தை ஒட்டியே இந்த அறிவை அரசாங்கங்கள் உபயோகப்படுத்தக் கூடும்.

சமீப காலத்தில், சில விஞ்ஞானிகள் எதிர்பாராவிதமாய்த் தங்கள் மேல் சுமந்துள்ள சமூகப் பொறுப்பின் தன்மையையும் முக்

கியத்துவத்தையும் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். அவர்கள், அணுக்குண்டை ஒரு ரகசியமாகக் கட்டிக் காத்துவரும் அரசாங்கங்களை அவற்றின் செல்வாக்கையும், சக்தியையும் உண்மையிலேயே பலம் வாய்ந்த ஒரு சர்வ தேச ராணுவ மொன்றை நிறுவுவதில் ஈடுபடுத்துமாறு கட்டாயப்படுத்த வேண்டும். அந்த ராணுவத்திடம் தங்களிட முள்ள அணுக்குண்டு ரகசியத்தை ஒப்படைப்பதோடு, அது சம்பந்தமான மூலப் பொருள்கள், தொழிற்சாலைகள் எல்லாவற்றையுமே அதனுடைய கட்டுப்பாட்டின்கீழ் விட்டுவிட வேண்டும். அதோடு, ஆராய்ச்சி முறையில் எதைப் பிரசுரிக்கலாம், எதைப் பிரசுரிக்கக் கூடாது என்பவை போன்ற விஷயங்களை அந்தச் சர்வதேச ஸ்தாபனத்தின் தீர்ப்புக்கே விட்டுவிட வேண்டும்.

அவசியமான தடைகளால் விஞ்ஞானப் புதுமைகள் காணும் வேகம் குறையலாம். அதனால் பாதக மில்லை. 'நன்மை செய்யவே ஆராய்ச்சி நடத்துகிறோம்' என்று சொல்லிக் கொண்டே விஞ்ஞானிகள் உலகை அழிவின் விளிம்பிற்குக் கொண்டுவந்து விட்டார்கள்.

நம்முடைய இன்றையச் சூழ்நிலையில் கட்டுப்பாடற்ற ஆராய்ச்சிக் கொள்கையை அனுமதிப்பதற் கில்லை. தேசிய நலன்களுக்காகத் தேசிய அரசாங்கத்தின் அதிகாரத்தின் கீழ் நடக்கும் ஆராய்ச்சிகூட உலக சமாதானத்தை நிலை நாட்டும் முயற்சியில் நம்பிக்கை தரும் செய்கை அல்ல. சர்வதேசக் கட்டுப்பாடு ஏற்பட வேண்டுமானல், அது தேசியக் கட்டுப்பாட்டை ஏற்கெனவே ஏற்படுத்தி யுள்ள தேசங்கள் தம்மிடையே ஒத்துப் போவதன் மூலமே சாத்தியமாகும். இப்போது ஏற்படுத்தப்படும் தேசியக் கட்டுப்பாட்டுக்கு இருப்பதைப் போன்ற சட்ட ரீதியான தடைகள் பிரசுரங்கள் விஷயத்திலும் இருப்பது நிச்சயம். திடீர் அழிவி லிருந்து உலகம் தப்ப வேண்டுமானல், விஞ்ஞான ஆராய்ச்சி முடிவுகளை வெளியிடப் பூரண சுதந்தரம் இருக்க வேண்டு மென்னும் கொள்கையை நாம் கைவிட்டாக வேண்டும்.



### சர்ச்சில் சிலை

சென்ற யுத்தத்தில் நேச நாடுகள் வெற்றி யடைந்ததற்கு விசேஷ காரணம் மாஜி பிரிட்டிஷ் பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சிலின் மன உறுதியும், ராஜ தந்திரமுமே யாகையால், அவருடைய சிலை ஒன்றைக் கென்ட் கடற்கரை யோரத்தில் பிரதிஷ்டை செய்யப் பிரிட்டிஷ் மக்கள் சிலர் கூடித் திட்டம்செய் திருக்கின்றனர். சர்ச்சிலின் மாபெரும் சிலை யொன்றை நிறுவி, அதன் வாயில் கல்லால் செய்யப்பட்ட ஒரு பெரிய சுருட்டு சதா எரிந்த வண்ணம் இருக்கச் செய்ய வேண்டும் என்று பலர் யோசனை கூறுகிறார்களாம். மின்சார விளக்குக்குப் பதிலாக, இந்தச் சுருட்டு முனையின் வெளிச்சம் கடற்கரையை அணுகும் மாலுமிகளுக்கு உதவக்கூடியதாயிருக்குமாம்.

—ஹிந்துஸ்தான்.

### விளைக்காதே!

இளமை என்பது ஓர் அற்புதமான பொருள். அதைக் குழந்தைகளின் பொருட்டு வீணுக்குவது மகா பாதகம்.

—பெர்ஞர்டு ஷா.

# 'உணர்ச்சி'க் கவிஞர்கள்

"அன்னம்"

நாய்க்குடை போலத் தினத்துக்கொரு 'கவி' முளைத்துக்கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் நாமெல்லாம் நிரம்ப ஜாக்கிரதையாயிருக்கவேண்டியிருக்கிறது. போலி வைரங்கள் அதிகரித்துக்கொண்டே போகும்படி விட்டுக்கொண்டிருந்தால், அசல் வைரங்களின் மதிப்புக் குறையத்தானே செய்யும்?

இளம் கவிஞர்கள் என்ற 'பெத்த' பெயருடன் விளங்கும் பலர், கவிதையின் பண்பாட்டையும், சட்டதிட்டங்களையும், தள அமைப்பையும் தெரிந்துகொள்ளாமலே 'கவி' எழுத முனைந்துவிடுகிறார்கள். இவர்களைத் 'தூக்கி விடும்' நபர்கள் தங்களுடைய அளவுக்கு மீறிய ஆதரவினால் ஏற்படக்கூடிய தீய விளைவுகளைப் பற்றிச் சற்றும் சிந்திப்பதில்லை. உற்சாகமூட்டுவது அவசியம்தான். சந்தேகமில்லை. ஆனால், யாரை, எப்போது உற்சாக மூட்டுவது? தவறான வழியில் செல்பவனைத் தட்டிக்கொடுப்பது எவ்வளவு ஆபத்தானது என்பதை அந்த ஆசாமிகள் அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. யாராவது விஷயம் தெரிந்த ஒருவர் இந்தக் 'கவிஞர்'களின் போக்கைக் கண்டித்தால், இந்தப் 'போஷகர்'களுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்துவிடுகிறது.

சமீபத்தில், ஒரு வாரப் பத்திரிகையின் ஆசிரியர் இந்த மாதிரி மின்மினிக் கவிஞர்களுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசியிருக்கிறார். அதற்குச் சாதகமாக, கவிஞர் பாரதிதாசன் தமது நிதியளிப்பு விழாவின் போது பேசிய பேச்சில் ஒரு பாகத்தைக் கத்தரித்து எடுத்துக் காட்டி, வாண வேடிக்கை செய்கிறார். 'உணர்ச்சி உந்தினால் கவிஞன் பிறக்கிறான்' என்று பாரதிதாசன் கூறியதாகவும், அதனால் உணர்ச்சியை மட்டும் நம்பிக்கொண்டு கவிதை எழுதும் கவிஞர்களைப்பற்றி யாரும் குறைவாக எண்ணவோ, பேசவோ, எழுதவோ கூடாது என்றும் இந்த ஆசிரியர் தாக்கீது விட்டுப் பயமுறுத்துகிறார். பாரதிதாசன் கூறிய விஷயம் முற்றிலும் வேறு. "உணர்ச்சி உந்தினால்தான் கவி எழுத முடிகிறது" என்றே அவர் சொல்லியிருக்கிறார். அதாவது, கவிதையின் பண்பாட்டை அறிந்த ஒருவன், கவி என்று சொல்லிக் கொள்ளப் பூரண யோக்கியதை உள்ள ஒருவன், உணர்ச்சி வசப்பட்டுக் கவி எழுதுகிறான் என்று அவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார். அத்துடன், அவர் அதைக் கூறிய சந்தர்ப்பமும் வேறானது. இந்த விஷயத்தைத் திரித்துப் பசப்புவது பலவீனத்தைத்தான் குறிக்கிறது.

உணர்ச்சியை மட்டும் நம்பிக் கவிதை எழுதப் புறப்பட்டுவிடக் கூடாது. கவிதை என்பது என்ன, சிறந்த கவிஞர்கள், சிறந்த கவிதைகளை எப்படி, ஏன், எப்போது, எதற்காக இயற்றினார்கள் என்ற விஷயங்களைத் தெரிந்துகொண்டு, போதிய படிப்பு, அறிவு, திறமை, பயிற்சி பெற்ற பிறகு, உணர்ச்சியின்

வாழ்க்கையின் விமர்சனமாகிய கவிதை எழுதும் விஷயத்தில் சலுகை, தாராள புத்தி, ஜனநாயகம் என்ற சொற்களுக்கு இடம் உண்டா?

மூலம் கவிதையைப் பிறப்பிக்க லாம். 'உணர்ச்சி மட்டும் போதும்' என்று ஆக்கிவிட்டால், தமிழ்நாடு முழுவதும் 'கவி'கள் மயம் தான். இன்று அப்படித்தான் ஆய்விட்டது. தெருவோடு போகிற பிச்சைக்காரன் கூடத் தனக்கு யாரும் பிச்சை யிடவில்லை என்கிற ஆத்திர 'உணர்ச்சி'யில் "சோதாப் பயலுக சோறு போடலே, அதான் கோதுமை சோளமும் கொடுக்கறான் சர்க்கார்......" என்று ஏதாவது ஆரம்பித்து விடுவான்.

உண்மையான கவி வெறும் உணர்ச்சியி லிருந்து பிறப்பதில்லை. அந்தக் கவியை எழுதுவதற்கு முன் எத்தனையோ காலமாகக் கவிஞன் அதற்காகத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ளுகிறான். வாழ்க்கையைப் 'படித்து,' உண்மையை உணர்ந்துகொண்டு மனத்தில் இருத்திக் கொள்கிறான். ஏதாவது ஒரு சமயத்தில் உணர்ச்சி அவனைத் தூண்டுகிறது. எத்தனை எத்தனையோ நாட்களாக மனத்தில் படிந்து சேர்ந்திருக்கிற சிறந்த கருத்துக்களைக் கவின் தரும் முறையில், கொட்டி விடுகிறான். திடீரென நினைத்துக் கொண்டு, உணர்ச்சி உந்தலின் மூலம், அகராதியைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு கவி எழுதி விடுகிறவன் அசல் கவிஞன் அல்ல; போலிக் கவிஞன் அவன்.

கவிதையின் சின்னஞ்சிறு லட்சணம் ஒவ்வொன்றையும் பூரணமாக அறிந்துகொண்ட பின்னரே கவிதை எழுத வேண்டும். அதை விட்டுவிட்டு, 'என்னை உணர்ச்சி உந்துகிறது; மென்னியைப் பிடித்துத் தள்ளுகிறது' என்று சொல்லிக்கொண்டு,

தலைக்குப் பின்னாலே
வாலிருக்கு—அந்த
வாலுக்கு முன்னாலே
தலையிருக்கு
வாலுக்குந் தலைக்கும்
மத்தியிலே—நல்ல
வாகான காலுகள்
நாலிருக்கு
நிதம் நாலிருக்கு
காலு நாலிருக்கு
நித நித நாலிருக்கு

என்று அர்த்தமில்லாமல் உளறிக் கொட்ட முற்படலாமா? அல்லது நாம்தான், "பாவம்! அவர் என்ன செய்வார்? அவரை உணர்ச்சி உந்திற்று; அதனால் தான் அப்படி எழுதினார். போனால் போகிறார்" என்று விட்டுவிடலாமா?

கவிதை என்பது சிறுகதை, கட்டுரைபோல எல்லாரும் லேசாகக் கையாண்டுவிடக் கூடிய விஷயமல்ல. ஜன சமூகத்தை ஆக்கவும் அழிக்கவும் கூடிய மகத்தான சக்தி அதற்கு இருக்கிறது. கதையையும் கட்டுரையையும் போல, யார் வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் எழுதலாம் என்கிற தாராளத்தைக் கவிதை விஷயத்தில் காட்டுவது மிக ஆபத்தான காரியம். கவி என்பவன் அக்னிப் பரீட்சையில் தேர்ந்து, ஸ்புடம் செய்து வர வேண்டும். அவன் விஷயத்தில் மட்டும், 'லோபித்தனமான விமர்சனம்' என்பது அர்த்தமற்ற, அறியாமையைக் குறிக்கும் பேச்சு. சம்பந்தமில்லாமல் வக்காலத்து வாங்கிக்கொண்டு அளக்க வருபவர்களுக்கு, இதை உணரும் சக்தியை, எல்லாம் வல்ல இறைவன் அளிப்பாராக!



# குழந்தை மனம்

சி. ந. வைத்தீஸ்வரன்

பேரரசு சிற்றரசை அடக்கி ஆளப் பார்க்கிறது. சிற்றரசு தன் உரிமைகளைக் காப்பதற்குப் பணிய மறுக்கிறது. இருவர்க்கிடையே போர், தோல்வி, சமாதானம் முதலியன நடக்கின்றன. சிற்றரசு கொக்கெனச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறது. சிற்றரசும் ஒரு காலத்தில் பேரரசு ஆகிறது. அப்பொழுது, புதுமைப் பேரரசு மற்றச் சிற்றரசைப் பணிய வைக்க முயற்சி செய்கிறது. இதே நாடகம் என்றும் நடக்கிறது. முற்காலங்களில் எல்லாம் வலுத்தவன் கையே ஓங்கிற்று. இப்பொழுது மத்யஸ்தம் பேசச் சங்கங்கள் தோன்றுகின்றன. இம்மாதிரி, முதலாளிக்கும் தொழிலாளிக்கும் நடக்கும் எண்ணற்ற போட்டா போட்டிகளைப் பற்றித் தினசரிப் பத்திரிகைகளில் படிக்கிறோம். கன்சிலியேட்டர் (மத்தியஸ்தர்)களும், ஆர்பிட்ரேட்டர் (பஞ்சாயத்தார்)களும், அட்ஜுடிக்கேட்டர்(தீர்ப்பளிப்பவர்)களும் பத்திரிகைகளில் அடிபடுகின்றனர். இரு திறத்தாருக்குள்ளும் அமைதியையும், ஒத்துழைப்பையும் ஆனந்தத்தையும் கொண்டுவந்துவிடுகின்றனர்.

இதை ஒத்த போரும் போட்டா போட்டியும் ஒவ்வொரு குடும்பத்திலும் நடைபெறுகின்றன. இவைகளில் கலந்துகொண்டவர்கள் இரு உலகங்களுக்குச் சொந்தக்காரர்கள். ஒருவர் குழந்தை உலகத்தார், மற்றவர் ப்ரௌடி (வயது வந்த) உலகத்தார். நாம் எல்லோரும் ப்ரௌடி உலகத்தைச் சேர்ந்தவர்கள். நம்முடைய சுகதுக்கங்களையும் பண்டங்களையும் குழந்தைகளிடமிருந்து காத்துக் கொள்ள எத்தனையோ புது "செக்ஷன்" (பிரிவு)களைச் சதா பிறப்பித்துக் கொண்டிருக்கிறோம். இதில் நாம் பிரிட்டிஷாரைவிடப் பல படிகள் உயர்ந்துவிட்டோம். சிறு குழந்தைகளும் இவைகளுக்கு அஞ்சாமல் எதிர்த்து, தக்க தண்டனையும் பெறுகின்றனர்.

உயர்ந்த தேச பக்தனையும், ஊக்கத்திலும் சுதந்தர தாகத்திலும் சிறு குழந்தைகள் தோற்கடித்து விடுகின்றனர். இந்தப் போட்டா போட்டிகள் மனிதன் தோன்றியதிலிருந்தே தோன்றியிருக்கின்றன. ஆனால், சமீப காலத்தில் குழந்தைகளுக்கும், ப்ரௌடிக்கும் இடையே ஒரு புது 'கன்சிலியேட்டர்' தோன்றியிருக்கிறார். இருவருடைய பிரச்னைகளையும் நன்கு அலசிப் பார்த்து, இன்னின்னது செய்தால் இருவரும் ஒத்து வாழலாம், சமூகம் முன்னேறும் என்று எடுத்துக்காட்டியிருக்கிறார். இந்தப் புதுக் கன்சிலியேட்டர்தான் "உள இயலார்."

ஒவ்வொரு தாயும் தந்தையும் தம்முடைய குழந்தைகளைப் போஷித்திருக்கின்றனர்; வளர்த்திருக்கின்றனர்; சீராட்டியிருக்கின்றனர்; கண்டித்தும் இருக்கின்றனர். ஆனால், இவை எல்லாம் நம்மனோர் நமக்குப் பரம்பரையாகக் கொடுத்த முறையே தான் செய்துவந்திருக்கிறோம்.

"குழந்தை உலகத்தை நாம் நன்கு உணர வேண்டுமாயின், நம் உலகத்தை மறந்து, நாம் முன்னொரு காலத்தில் வாழ்ந்து வந்த குழந்தை உலகத்தில் புகுவோம் என்ற மனப்பான்மையை முதலில் நமக்குள் ஆக்கிக் கொள்ள வேண்டும்."

தெரிகிறது. கண்ணுலே கண்டால் மட்டும் போதாது. எனவே குழந்தை வாயால் உண்பதுமட்டும் அல்ல, நினைக்கவும் செய்கிருன்.

வாய்க்கு அடுத்தபடியாகக் கைகள் ஸ்பரிச உறுப்புகளாகப் பயன்படுகின்றன. எதைக் கண்டாலும் தொட்டுப் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் குழந்தையை உந்துகிறது. முதலில் பண்டங்களை உள்ளங்கையில் வாரி எடுக்கத்தான் தெரியும். ஒன்பதாம் மாதத்தில்தான் விரலேயும் பெருவிரலேயும் எதிர் எதிராக உபயோகித்துப் பண்டங்களைப் பற்ற முடியும். மிருகங்களுக்கும் மக்களுக்கும் இதுதான் முக்கிய வேற்றுமை என்னலாம். மனிதன் ஒருவனே தன் கரங்களால் தன் அறிவை வெளிக்காட்டுகிருன். யந்திரங்களும் கலைகளும் இதற்குச் சான்று.

முதல் நாளிலேயே பாலின் மணத்துக்கும், வேப்பெண்ணெய் அல்லது "பெட்ரோலியம்" போன்றவைகளின் மணத்துக்கும் வித்தியாசத்தை உணர்கிருன். பாலை விரும்புகிருன்; எண்ணெயை வெறுக்கிருன். மூன்று வாரங்களில் சில வாசனை மருந்துகளை நன்ருய் வெறுக்கத் தெரிந்துகொண்டிருக்கிருன். இரண்டாம் நாளிலிருந்தே தாய்ப் பாலின் மணத்தால் தாயாருக்கும் மற்ற மாதருக்கும் உள்ள வேற்றுமையை உணர்கிருன்.

பிறந்த குழந்தைக்குச் சப்தத்தைக் கேட்கும் திறமைதான் மிகவும் நிதானமாக வளர்கிறது. ஆரம்பத்தில் சாதாரண ஓசைகள் குழந்தையை எவ்விதத்திலும் அசைப்பதில்லை. ஆனல், பெரிய சப்தங்கள்—இடி முழக்கம் போன்றவை — குழந்தையைத் துடிக்கச் செய்யும். இதன் காரணமாகப் பல அச்சங்களைப் பிறப்பிக்கும். இயற்கையாகக் குழந்தைக்கு அச்சமே கிடையாது. அச்சம் பிறப்பது செயற்கை என்றும், அதுவும் சப்தத்தால் என்றும் குழந்தை உளஇயலார் கூறுகின்றனர். ஆரும் வாரத்திலிருந்து மெலிந்த ஓசைகளைக் கேட்டு, மெதுவாக அந்தத் திக்கில் தலையைத் திருப்புவான். இதன் பிறகு பற்பல ஓசைகளின் வித்தியாசத்தை உணர்கிருன்.

இரண்டு மாதத்திலிருந்து நான்கு மாதங்களுக்குள் பலருடைய குரல்களில் கவனம் செலுத்துகிருன். மற்ற ஒலிகளைக் காட்டிலும் மனிதக் குரலில் தனிப் பிரேமையைக் காட்டுகிருன். சுற்றிலும் கேட்கப்படும் ஒலி மெல்லியதா, கடுமையானதா, கூக்குரலா, போராட்டச் சச்சரவா, ஊக்க மளிப்பதா, இன்னிசையா என்று நன்கு உணரும் பருவம் இது. குழந்தை நரம்பு இயலும் இந்த ஒலி வகையை ஒத்திருக்கிறதென்றும் கூறுகின்றனர். முதல் ஆண்டின் இறுதிப் பகுதியில் ஓரிரு பதங்களை உச்சரித்துத் தன் குரலோடு விளையாடுகிருன். சூழ்நிலையின் பேச்சையும் பழகுகிருன். கொஞ்சங் கொஞ்சமாகப் பிறரோடு பேச்சின் மூலம் தொடர்பைத் தேடுகிருன். பிறகு ஓயாது பேசுகிருன். பேசுவதில் தனி இன்பங் காண்கிருன். பெற்ருேரையும் மற்ருேரையும் தன் குரலால் தன்வசப்படுத்துகிருன்.

ஆறு ஏழு மாதங்களில் முன்வரிசைப் பற்கள் இரண்டு தோன்ற ஆரம்பிக்கின்றன. இதன் அறிகுறியாகச் சில சமயங்களில் குழந்தைக்குப் பேதியும் ஆகிறது. இதுவரை தாய்ப்பால் குடித்த குழந்தையின் ஜீரண சக்தி

வளர்ந் திருக்கிறது. கடினமான பிஸ்கோத்துகளையும், முறுக்கையும் கடிக்கும் திறமை வந்து கொண் டிருக்கிறது. இதுவரை தன் கைக்குக் கிடைத்ததையெல்லாம் சப்பிப் பார்த்தே தன் சூழ்நிலையை நிர்ணயித்தது. இப்பொழுது கடித்துப் பரிசோதிக்க ஆரம்பித்துவிடுகிறது. பால் ஊட்டும் தாயையும் கடிக்கிறது. ஏன்? தாயின்மேல் கோபமா? இல்லை. மற்ற பண்டங்களைக் கடித்துப் பார்ப்பதுபோல் தாயையும் கடித்து, "ஓஹோ, தாய் கடிக்கு இப்படி இருப்பாள்'' என்று நிர்ணயிக்கிறது. சுமார் ஒன்பது பத்து மாதங்களில் தாய்ப்பால் மறந்து, மற்ற உணவை உண்ணத் தயாராகி வருகிறது. குழந்தைக்கு எல்லாம் பரிசோதனை.

எனவே,குழந்தைதன் உலகத்திலிருந்து நம் உலகத்தைப் படிப்படியாகப் பரிசோதனை செய்து வருகிறது. வருங்கால மனிதனுகத் தன்னைத் தயாரிக்கிறது. இந்த முயற்சியில் நம் தூக்கத்தையும், ஓய்வையும் கெடுக்கலாம்; நம் புத்தகங்களைக் கலைக்கலாம், கிழிக்கலாம்;கண்ணுடிக் கோப்பைகளை உடைக்கலாம்; மையைக் கொட்டலாம்; கண்ட பக்கம் கிறுக்கலாம். ஆனுல், இவைகளில் ஒன்றையாவது நம்மைத் துன்புறுத்த வேண்டுமென்றோ, நம் பண்டங்களைப் பாழாக்க வேண்டுமென்றோ குழந்தை நினைப்பதில்லை. குழந்தை மனம் மலர்வதற்கே இவைகளெல்லாம் செய்து பார்க்கிறது. குழந்தையின் உடலை வளர்க்க நாம் எவ்வளவு உயர்தரப் பாதுகாப்புகள் குழந்தைக்குச் செய்கிறேமோ, அதற்கு மேலாக அதன் மன வாழ்வு மலர்வதற்கும் நாம் அன்பும் அறிவும் கலந்த முறையில் உதவி புரிந்தால், ஒவ்வொரு மனையும் ஆனந்த இல்லமாகாதா?



## உண்மையே பேசு!

ஒரு சின்னப் பையன் சாட்சிக் கூண்டில் நின்றுகொண்டு, கேட்கப்படும் ஒவ்வொரு கேள்விக்கும் வெகு நிதானமாகப் பதில் அளித்து வந்தான். நீதிபதிக்குச் சந்தேகம் தோன்றியது.

"கோர்ட்டில் என்ன சொல்லவேண்டுமென்று நீ இங்கே வருமுன் யாராவது உனக்குச் சொல்லிக் கொடுத்தார்களா?'' என்று கேட்டார் அவர்.

"ஆமாம், ஸார்'' என்றுன் பையன்.

வாதியின் வக்கீல் ஜரூர் ஆகிவிட்டார். "இந்தப் பையனை யாரோ தயார் செய்திருக்கிறுர்கள் என்பது நிச்சயம்'' என்றுர் அவர்.

நீதிபதி பையனின் பக்கம் திரும்பினர்.

"உனக்கு யார், என்ன சொல்லிக் கொடுத்தார்கள் என்று எனக்குச் சொல்லுவாயா?''

"இந்த வக்கீல்கள் எல்லாம் கண்ட கேள்விகள் கேட்டு என்னை மாட்டி வைக்கப் பார்ப்பார்கள் என்றும், ஆனுல், நான் உண்மையையே சொல்லிக்கொண்டு வந்தால் எந்த விதக் கஷ்டமும் இருக்காது என்றும் என் தகப்பனுர் எனக்குச் சொல்லிக் கொடுத்திருந்தார் ஸார்!'' என்று பையன் பதிலளித்தான்!

—டிக் பிங்க்

# மார்க்ஸீயப் பொருளாதாரம்

ரா. ஹாலாஸ்ய நாதன்

III

ஆண்டான் - அடிமைச் சமூகத்தில், ஆளும் வர்க்கத்திற்கு—எஜமானர்களுக்கு — உற்பத்திச் சாதனங்கள், நிலம், ஆடு மாடுகள் முதலியன சொந்தமாக இருந்தன. இவைகளோடு, அடிமைகளும் (தொழிலாளர்களும்) சொந்தம். ஆடு மாடுகளைப் போல், அடிமைகளை விற்கவோ, வாங்கவோ செய்யலாம்; இத்துடன் அடிமைகளைக் கொல்லவும் உரிமை உண்டு. ரோமானியர்கள் "பேசும் கருவிகள்" என்று அடிமைகளை அழைத்தார்கள்! "அடிமைகளின் எஜமான் அடிமைகளைத் தனது சொத்தில் ஒரு பாகமாகக் கருதினான். ஒருவனுக்கு எவ்வளவு அடிமைகள் இருக்கிறார்கள் என்பதைக் கணக்கெடுத்து, ஒருவனின் சொத்து மதிப்பிடப்பட்டது. அடிமைகளைப் பலாத்காரமாக வேலை செய்யும்படி செய்தார்கள்" என்று "அரசியல் பொருளாதாரம்" என்ற புத்தகத்தில் எ. லியாண்டிவ் குறிப்பிடுகிறார்.

மனித வர்க்கத்தின் சரித்திரத்தில், அடிமைச் சமூகத்தில்தான் முதன் முதல் சுரண்டுதல் (பிறர் உழைப்பைச் சுரண்டுதல்) தலை தூக்கிற்று என்று பிரடரிக் ஏங்கல்ஸ் கூறுகிறார்.

எஜமான்கள் அடிமைகளுக்கு உணவு, உடை முதலியன கொடுத்துப் பராமரித்தார்கள். ஏனெனில், அடிமைகளின்றிப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியுமா? அடிமைகள் இறந்து போனால் எஜமானனின் சொத்தும் குறையுமல்லவா?

அடிமைச் சமூகத்தில், எஜமான்களின் சுய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே பொருள் உற்பத்தி செய்யப்பட்டது. எனவே, பொருள் உற்பத்தி விஸ்தாரமான ரீதியில் நடக்கவில்லை.

சிறுகச் சிறுகப் பொருள் உற்பத்தி அதிகரித்தது. அந்தக் காலத்தில் மனித வர்க்கம் கூட்டம் கூட்டமாக வாழ்ந்தது. சில கூட்டங்கள் ஆடு மாடுகளை மேய்த்து வந்தன. வேறு சில கூட்டங்கள் பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தன. சில கூட்டத்தினர் உற்பத்தித் துறையில் அபிவிருத்தி யடையாமலிருந்தனர். எனவே, இந்தக் கூட்டத்தினரிடையே பண்டமாற்றுதல் நடந்தது.

முன்பு பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சமூகத் தலைவர்கள் இப்பொழுது அரசர்களானார்கள். அரசர்கள், ராணுவத் தலைவர்கள், முன்பு சமூகத்தின் பொதுச் சொத்தாக இருந்த நிலம், ஆடு மாடுகள், உற்பத்திச் சாதனங்கள் முதலியவைகளைத் தங்கள் தனிச் சொத்தாகப் பாவித்தார்கள். எனவே, சுதந்தர மனிதர்கள் என்று கருதப்பட்டவர்களுக்கிடையே ஏழைகள்—பணக்காரர்கள் என இரு கூட்டத்தினர் இருந்தார்கள்.

*அடிமைச் சமூகம், நிலப் பிரபுத்துவ சமூகம் இரண்டையும் பற்றிக் கூறுகிறது இக்கட்டுரை. அடுத்த இதழில் முதலாளித்துவ சமூகம் பற்றி எழுதப் பெறும்.*

இத்துடன் சமூகத்தில் தொழில் பிரிவும் ஏற்பட்டது. சிலர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டார்கள். வேறு சிலர் விவசாயக் கருவிகள், சட்டி பானைகள், வண்டி முதலியவைகளை உற்பத்தி செய்தார்கள். எனவே, விற்பனைக்காக உற்பத்தி செய்வது என்ற முறை வர வரச் சமூகத்தில் முக்கிய இடம் பெற்றது.

இவ்வாறு பண்டமாற்றுதலும், விற்பனையும் அதிகரிக்கவும் பொருள்களை வாங்கி விற்கும் 'வியாபாரிகள்' தோன்றினர்கள். முதலில் ஒரே தேசத்திலுள்ள பல கூட்டங்களுக்கிடையேயும், பின்னர் தேசங்களுக்கிடையேயும் வியாபாரம் நடந்தது. முதலில் பண்டமாற்றுதல் நடந்தது. பின்னர், தங்கம், வெள்ளி முதலிய அழியாத உலோகங்கள் பண்டமாற்றுதலுக்குப் பொதுப் பொருளாக உபயோகிக்கப்பட்டன. இறுதியில் நாணயங்கள் உபயோகிக்கப்பட்டன.

ஆண்டான் - அடிமைச் சமூகத்தில் உற்பத்திச் சாதனங்கள் அபிவிருத்தியடைந்தன. இரும்பால் செய்யப்பட்ட கருவிகள், மா அரைக்கும் கருவி முதலியன உபயோகிக்கப்பட்டன. தொழில் பிரிவினை விஸ்தரித்து, சுதந்தரமாகக் குடிசைத் தொழிலில் ஈடுபட்டவர்களும், வியாபாரிகளும் அதிகரித்தனர். பொருள் விற்பனையும் அதிகரித்தது. எனவே, எஜமானர்கள் அடிமைகள் மூலமாக அதிகப் பொருள்களை உற்பத்தி செய்யத் துவக்கினர்கள். அதாவது, அடிமைகளை அதிகமாகச் சுரண்டத் துவக்கினர்கள். எஜமானர்களின் சுரண்டுதல் சகிக்க முடியாத கட்டத்தை அடைந்தது. வர்க்க முரண்பாடு முற்றிற்று.

பல நாடுகளைக் கைப்பற்றி, அங்குள்ள மக்களை ஒவ்வொரு அரசனும் அடிமைப்படுத்தியதால், அடிமைகள் கூட்டமும் பெருகிற்று. அடிமைகள் பல நாடுகளில் தொடர்ச்சியாகப் புரட்சி செய்தார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, ரோமாபுரியில் ஸ்பார்டாகஸ் என்ற அடிமையின் தலைமையின்கீழ் ஆயிரக்கணக்கான அடிமைகள் புரட்சி செய்து ரோம சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரத்தையே ஆட்டி அலைத்தார்கள்......

அடிமைச் சமூகத்தை மாற்றியமைப்பதற்கு வேண்டிய சக்திகள் அனைத்தும் பக்குவமடைந்து விட்டன. அடிமை முறை, சமூக முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்தது. அடிமைகளின் புரட்சி, ஆண்டான்-அடிமை சமூகத்திற்குச் சாவு மணி அடித்தது. அடிமைகள் ஸ்தாபன ரீதியாக ஒன்றுபட்டிராததால்,போதிய திறன்,அனுபவம் முதலியன இல்லாததால் சுரண்டுதலை அறவே ஒழித்த சமூகத்தைச் சிருஷ்டிக்க முடியாது போயிற்று. புதிய சமூகம்—நிலப் பிரபுத்துவ சமூகம்—தோன்றிற்று.

நிலப் பிரபுத்துவ சமூகத்தில் அடிமைகள் ஓரளவு விடுதலை பெற்றார்கள். நிலப் பிரபுக்கள் (நிலச்சுவான்தார்கள்) அடிமைகளை விற்கலாம், அல்லது வாங்கலாம். ஆனல், முன்போல் கொல்ல முடியாது. ஆயினும் சுரண்டுதல் மாத்திரம் நிற்கவில்லை. புதிய முறையில் உழைப்பாளிகள் சுரண்டப்பட்டார்கள். நிலப் பிரபுத்துவ சமூகத்தின் ஆரம்பக் காலத்தில், அரசனும், நிலப் பிரபுக்களும் விவசாயிகளின் உழைப்புச் சக்தியைச் சுரண்டி, டாம்பீக வாழ்க்கையை நடத்தினர்கள்.

வியாபாரம் விஸ்தாரமாக நடக்காததால், நிலப் பிரபுக்களும், அரசர்களும் தங்களுடைய சொந்த உபயோகத்திற்காக விவசாயிகள் உற்பத்தி செய்த தானியங்களையும், ஏனைய பொருள்களையும் சுரண்டி வந்தார்கள். சுரண்டப்பட்ட பொருள்களில் ஒரு பகுதி ஆயுதங்களை வாங்கவும், வெளி நாடுகளி லிருந்து ஏனைய பொருள்களை வாங்கவும் உபயோகிக்கப்பட்டன. பின்னர், வியாபாரம் அதிகரிக்கவும் சிலருடைய ஆசையும் அதிகரித்தது. மேன் மேலும் விவசாயிகளை அதிகமாகச் சுரண்டத் துவக்கினார்கள்.

நிற்க, மற்றொரு புறம், சுதந்தரமாக விவசாயத் தொழில் புரிந்தவர்களும், சுதந்தரமாகக் குடிசைத தொழில் புரிந்தவர்களும் இருந்தனர். நிலம், கருவிகள் முதலியன இவர்களுக்கே சொந்தம்.

சுயதேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்த பொருள்களை விற்றார்கள்; வியாபாரிகள் இவைகளைச் சொந்த தேசத்திலும், வெளி நாடுகளிலும் விற்று வந்தார்கள். வியாபாரம் விஸ்தரிக்கவும், பொருள்களின் தேவையும் அதிகரித்தது. எனவே, அரசர்களும், நிலப் பிரபுக்களும் விவசாயிகளை மேன்மேலும் சுரண்டத் துவக்கினார்கள். சர்க்கார் அதிகாரம் இவர்களிட மிருந்ததால், தொன்றுதொட்டுச் சமூகத்தின் பொதுச் சொத்தாக இருந்த நிலத்தைக் கைப்பற்றினார்கள். விவசாயிகளைப் பண்ணை அடிமைகளாகவே பாவிக்கத் துவக்கினார்கள். நிலப் பிரபுக்களுக்கும், அரசர்களுக்கும் மாமூல்படி முன்பு கொடுத்து வந்த பொருள்களோடு, நிலப் பிரபுக்களின் நிலத்தில், ஒரு வாரத்தில் மூன்று, நான்கு நாட்கள் பண்ணை அடிமைகளை வேலை செய்யும்படி நிர்ப்பந்தித்தார்கள்.

நிலப் பிரபுக்களும், அரசர்களும் அதிகமாக நிலத்தைப் பெறவும், பண்ணை அடிமைகளின் எண்ணிக்கையைப் பெருக்கவும் விரும்பினார்கள். அதே சமயத்தில் பண்ணை அடிமைகள் சுதந்தரமாக வேலை செய்யவும், நிலப் பிரபுக்களுக்குக் கொடுத்துவந்த மிதமிஞ்சிய மானியத்தைக் குறைக்கவும் விரும்பினார்கள். எனவே, இரு வர்க்கங்களும் முட்டி மோதின. எங்கும் பண்ணை அடிமைகளின் புரட்சி வெடித்தது. நிலப் பிரபுத்துவ சமூகம் ஆட்டங் கொடுத்தது.

இந்தக் கடுமையான வர்க்கப் போராட்டத்தோடு கூடவே, விஞ்ஞான வளர்ச்சியும் ஏற்பட்டது. நீராவி கண்டுபிடிக்கப்பட்டது. குறைந்த நேரத்தில், குறைந்த ஆட்களை வைத்துக் கொண்டு அதிகமாகப் பொருள்களை உற்பத்தி செய்யத் துவக்கினார்கள்.

யந்திரத்தொழிலுக்குச் சுயேச்சையான, நிலப் பிரபுக்களுக்குக் கட்டுப்படாத, மூலப் பொருள்களோ, உற்பத்திச் சாதனங்களோ, மூலதனமோ இல்லாத, உழைப்புச் சக்தி மாத்திரமே உள்ள தொழிலாளர்கள் தேவை. நிலப் பிரபுத்துவ முறை இதற்கு முட்டுக்கட்டை போட்டது. எனவே, வளர்ந்து வரும் முதலாளிகள் வர்க்கமும் நிலப் பிரபுத்துவ முறையை ஒழிக்க முன்வந்தது.

பல நாடுகளில் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி நடந்தது. நிலப் பிரபுத்துவ முறை அடியோடு ஒழிந்தது. முதலாளித்துவ சமூகம் ஏற்பட்டது.

# பிச்சை

**ஐவன் துர்கனேவ்**

நகரத்திற் கருகில் உள்ள ஒரு பெரிய சாலேயில் நோயாளியான ஒரு கிழவன் நடந்து போய்க்கொண் டிருந்தான். தேய்ந்து போயிருந்த அவன் கால்கள் அவனுக்குச் சொந்தமே யில்லாதவை போலத் தோன்றின. கால்களை மெதுவாக இழுத்து இழுத்துச் சென்றான். அவனுடைய ஆடைகள் கிழிந்து தொங்கிக்கொண் டிருந்தன. மூட்டப்படாமலிருந்த அவனுடைய தலை மார்பின்மேல் கவிழ்ந்து கிடந்தது... அவன் மிகவும் களைத்துப் போயிருந்தான்.

வழியோரமாகக் கிடந்த ஒரு கல்லின் மேல் முன்புறமாகக் குனிந்துகொண்டு அவன் உட்கார்ந்தான். முழங்கைகளால் ஊன்றிக் கொண்டு, இரு கைகளிலும் முகத்தைப் புதைத்துக் கொண்டான். கண்ணீர்த் துளிகள் வளைந்திருந்த விரல்களின் இடுக்கு வழியாகக் கீழே, உலர்ந்த பழுப்பு நிற மண்ணில் விழுந்தன.

பழைய சம்பவங்கள் அவனுக்கு ஞாபகம் வந்தன...

ஒரு காலத்தில் அவனும் பணக்காரனாகவும் ஆரோக்யவானாகவும் விளங்கினான்...விரோதிகளுக்காகவும், நண்பர்களுக்காகவும் தன் செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் கெடுத்துக் கொண்டான்...இப்பொழுதோ, அன்றாட ஆகாரத்திற்குக்கூட வழியில்லை. எல்லோரும் அவனை உதறிவிட்டார்கள். விரோதிகளுக்கு முன்பாக நண்பர்கள் அவனைக் கைவிட்டு விட்டார்கள்......பிச்சை எடுக்கும்படியான நிலைமைக்குத் தன்னை ஏன் அவன் தாழ்வுபடுத்திக் கொள்ள வேண்டும்? மனத்துக்குள் அவன் வெட்கமும் வேதனையும் அடைந்தான்.

கண்ணீர்த் துளிகள் விழுந்து கொண்டே யிருந்தன. அவைகள் பழுப்பு நிற மண்ணில் கறுப்புப் புள்ளிகளை உண்டாக்கின.

திடீரென்று யாரோ தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவது அவன் காதில் விழுந்தது. களைத்துக் கிடந்த தலையைத் தூக்கிப் பார்த்தான். ஓர் அன்னியர் அவன் முன் நின்றுகொண் டிருந்தார்.

அவருடைய முகம் கடூரமாக இல்லை; சாந்தமும் கம்பீரமும் நிறைந்து விளங்கிற்று. அவர் கண்கள் உக்ரமாக இல்லாமல் பிரகாசமாகவே இருந்தன. அவருடைய பார்வை தீர்க்கமாக விருந்தாலும் கருணைமிகுந்து இருந்தது.

நிதானமான குரலில் அவர் கூறினார்: "உன் செல்வத்தையெல்லாம் நீ பிறருக்குக் கொடுத்துத் தீர்த்து விட்டாய். ஆனால், நன்மை செய்ததற்காக நீ வருத்தப்பட வில்லையே?"

"நான் அதற்காக வருந்தவில்லை. ஆனால், இப்பொழுது நான் இங்கே செத்துக்கொண்டிருக்கிறேனே!" என்று கிழவன் ஒரு பெருமூச்சுடன் சொன்னான்.

அன்னியர் மேலும் கூறினார்:

பிச்சை மிகுந்தவன் பிச்சை எடுப்பதா!— வேறு வழி யில்லாவிட்டால், என்ன செய்வது? இரந்துண்டாவது இறவாம லிருக்க வேண்டாமா!

"உன்னிடம் பிச்சை கேட்க உலகத்தில் பிச்சைக்காரர்களே இல்லாமல் இருந்திருந்தால், உன் கருணையை நீ யாரிடம் காட்டியிருப்பாய்? உன் கருணை உபயோகமற்றே போயிருக்கும் மல்லவா?"

கிழவன் ஒரு பதிலும் சொல்லவில்லை; சிந்தனையில் ஆழ்ந்தான்.

"ஏழை மனிதனே, நீயும் இப்பொழுது கௌரவத்தை உதறித் தள்ளு; சென்று, பிச்சை கேள். மற்றப் பணக்காரர்களும் உண்மையில் நல்லவர்கள்தாம் என்று காட்டச் சந்தர்ப்பம் கொடு. அந்த வாய்ப்பு உனக்கு வந்திருக்கிறது" என்றார் அந்த மனிதர்.

கிழவன் எழுந்து சுற்று முற்றும் பார்த்தான்... ஆனால், அந்த அன்னியர் மறைந்து விட்டார். சாலையின் கோடியில், தொலை தூரத்தில், ஒரு வழிப்போக்கன் வந்துகொண் டிருப்பதைக் கண்டான்.

அந்தக் கிழவன் அவனிடம் சென்று கையை நீட்டினான். ஆனால், அந்த வழிப்போக்கன் அவனைக் கடுமையாகப் பார்த்துவிட்டு மேலே சென்றான்; ஒன்றும் கொடுக்கவில்லை.

அவனுக்குப் பிறகு வேறொருவன் வந்தான். அவன் கிழவனுக்கு ஏதோ பிச்சை யிட்டுவிட்டுச் சென்றான்.

அந்தச் சில காசுகளைக் கொண்டு கிழவன் சிறிது ஆகாரம் வாங்கிக் கொண்டான். பிச்சை யெடுத்துப் பெற்ற அந்த ஒரு வாய் ஆகாரம் அவனுக்கு மிகவும் ருசியாக விருந்தது. அவனுடைய உள்ளம் அதற்கப்புறம் வெட்கப்படவே யில்லை; நேர் மாறாக, அதில் அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்தன.



## எச்சரிக்கை

புது உலகம் பூக்கும் காலையில் வாழ்ந்திடும் நமக்கு விஞ்ஞானிகள் ஓரளவு பெரும் சக்திகளை அளித் திருக்கிறார்கள். ஆனால், அவை இப்போது அரசியல் வாதிகளிடம் சிக்கி யுள்ளன.

புதிய ராணுவ முறைகளையும், பயங்கர, புதுவித யுத்த தளவாடங்களின் உபயோகத்தையும் நாம் இப்படியே அனுமதித்துக்கொண் டிருந்து இன்னொரு யுத்தத்துக்கு விதை போட்டுவிட்டோமானால் நாடும், நகரமும், ஜனசமூகமும் என்றைக்குமே கிளம்ப முடியாதபடி அழிந்து போவது நிச்சயம்.

அரசியல் சமூக நடவடிக்கைகளால் உலக பந்தோபஸ்து சாத்தியமில்லையானால், அழிவைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம். சர்வதேச நடவடிக்கைகளில் ருஷ்யா கொண்டுள்ள அவநம்பிக்கைக்கு அணுக்குண்டு ரகசியமே காரணம். இவ்விதச் சூழ் நிலையில் பரஸ்பர அவநம்பிக்கையும், துவேஷமும் தலை தூக்குமானால், படுநாசத்தில் கொண்டு விடக்கூடிய விளைவுகள் தாமாக நிகழும். அணுக்குண்டுக்குப் பின்னால் அதிகார வேட்கை இருப்பது சகஜமே. யுத்தவெறி பிடித்து அலையும் ஏகாதிபத்தியங்கள் தார்மிக உணர்ச்சி என்ற போர்வைக்குள் மறைந்து கொள்வதும், ஆதிக்கவெறி மிதவாத வேஷம் போடுவதும் சர்வ சாதாரணம்தான்.

வெற்றி யடைந்த நாடுகள் தங்களிடையே நிலவும் குரோத மனப்பான்மையை ஒதுக்கி வைத்து விட்டு, இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதில் ஈடுபட வேண்டும்.

—ஐன்ஸ்டைன்

# ஒன்றும் இல்லை

●

நாரா

எச். ஜி. வெல்ஸ் இறந்துவிட்டார். மறியல் நடக்கிறது.

இங்கிலாந்தில் வெல்ஸ் இறந்தால், இந்தியாவில் மறியல் நடப்பானேன்? மனிதன் சாவது இல்லை. அவன் எப்போதும் செத்துக்கொண்டுதான் இருப்பான். உயிரோடு இருக்கிறவன், தான் கற்றவைகளை யெல்லாம் தனக்குப்பின்னே விட்டுச்செல்ல முடிவதில்லை. கற்றவைகளில் கொஞ்சத்தை மட்டும் மற்றவர்களுக்குக் கொடுக்க முடிகிறது. கொடுக்க முடியாமல் மிச்சம் மீதியாக எவ்வளவோ நின்றுவிடுகிறது. பிழைப்பதற்காகத் தினசரி செத்துக் கொண்டே இருக்கிறான். சாகாமலிருக்க எவ்வளவோ பிரயாசைப்படுகிறான். திடுதிப்பென்று செத்துப்போய் விடுகிறான். செத்து எங்கே போகிறான்? போவதென்றால், எங்கே? எங்கே யென்றால், அர்த்தம் என்ன? ஏதாவது ஒரு திசையை நோக்கிப் போகிறான் என்றா, அர்த்தம்?

'நோக்கிப் போவது' என்றால், இதில் தன்மை முன்னிலை என்ற இரண்டு நிலைகள் பெறப்படுகின்றன. உடம்போடு உயிர் இருக்கும்போது, உடம்பைப் பொறுத்து, உடம்பு ஒரு பொருளாகிறது. உடம்பும் உயிரும் சேர்ந்து தன்மைப் பொருளாகின்றன. ஒரு தன்மைப் பொருளும் இன்னொரு தன்மைப் பொருளும் எதிர்ப்படும் போது, ஒன்றுக்கு மற்றது தன்மை முன்னிலையாகவும், முன்னிலை தன்மையாகவும் மாறிமாறி ஆகிக்கொள்ளுகின்றன. அப்போது, திசையை நிர்ணயிப்பது எப்படி? திசைக்கு நாலு அளவு உண்டு. அகலம், நீளம், உப்பல், காலம். காலத்தைத் தவிர மற்றவைகளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் வரம்பு தெரிகிறது. ஒரு ரூபம் பூராவாக நம் மனத்தில் பதிந்து அதை நாம் உள்ளபடி புரிந்து கொள்ளுவதற்குப் பிடிக்கிற உழைப்புச் செலவு தான் காலம். கூர்மையான கண்ணால் இரண்டு நிமிஷத்தில் ஒரு பக்கம் நிறைந்த எழுத்தைப் படிக்க முடிந்தால், பார்வை மழுங்கிய கண்ணால் அதைப் படிப்பதற்கு இன்னும் பல நிமிஷங்கள் அதிகம் பிடிக்கிறது.

பிடிக்கிற தென்றால் என்ன? கவர்கிறது. அதாவது இழுக்கிறது. எது இழுக்கிறது? முன்னிலைப் பொருள். ஏன் இழுக்கிறது? இழுப்பதே அதன் தொழில். தொழில் என்றால் மாமூல் வேலை. வேலை யென்றால், யாருடைய வேலை? கடமை. கடமை யென்றால்? கடன். கடன் என்றால்? வாங்கியதைத் திருப்பிக் கொடுக்க வேண்டியது. யாரிடம் வாங்கியதை? யாரிடம் திருப்பிக் கொடுப்பது? கொடுப்பது என்றால் பெற்றுக் கொள்ள ஒருவன் இருக்க வேண்டும். திருப்பிக் கொடுக்காவிட்டால் கொடுத்தவர் கண்டிப்பாக வசூலித்து விடுவார் என்ற பயம் இருக்க வேண்டும். எதிரி என்ன செய்வான் என்று தெரியாத போதுதான் பயம் உண்டா-

உலகத்தின் தலை சிறந்த சிந்தனையாளர்களில் ஒருவரான எச். ஜி. வெல்ஸ் தமது 79-வது வயதில், லண்டனில், 13-8-46-ல் இறந்து விட்டார். 'உருப்படாத' மனிதனை எண்ணி மனம் உடைந்துபோன அவரைப் பற்றிய உடைந்த சிந்தனை இது.

கிறது. ஏற்கெனவே இல்லாத ஒன்றுதான் 'உண்டாக' முடியும். முடியுமென்னும் போது முடியாது என்கிற சங்கதியும் இருக்கிறது. இருக்கிறது இல்லாமல்போக முடியாது. இருப்பது உள்ளது. உள்ளது உண்மை நிலை. உண்மை நிலை யென்றால், இருப்பது நிலைத் திருப்பதாக ஆவது. நிலைத்திருப்பது இல்லாமல் போகாது. இல்லாதது இல்லாததுதான். இல்லாமல் போவது என்றால் இங்கே இருப்பது, இங்கே இல்லாமல் வேறோர் இடத்துக்குப் போய் அங்கே இருக்கிறது என்று ஆகிறது. அப்படியானல், உண்மை எங்கும் இருக்கிறது. ஆனால் ஒரே இடத்தில் அது இருப்ப தில்லை. இடம் மாறி இருப்பதை நாம் இல்லாமற் போவது என்கிறோம்.

போகிற இடம் எங்கே? அது தான் தெரிய வில்லை. அதனால் தான் எச். ஜி. வெல்ஸ் இறந்தார், இந்தியாவில் மறியல் நடக்கிறது.



### இப்படித்தான் எழுதி யிருப்பேன்!

வெல்ஸ் உயிரோடு இருக்கும்போதே, தன் மரணத்தைக் கற்பனை செய்துகொண்டு எழுதிய குறிப்பு:

நேற்று பாடிங்க்டனி லுள்ள அசக்தர்கள் ஆஸ்பத்திரியில் மாரடைப்பினல் தமது 97-வது வயதில் இறந்து போன எச். ஜி. வெல்ஸ் என்னும் பெயர் இந்தத் தலைமுறையில் வாழும் இளைஞர்களுக்கு அவ்வளவாகத் தெரிந்திருக்காது........தாழ்ந்த வகுப்பில் பிறந்தார் என்னும் இழிவை அவர் ஏற்றுக் கொள்ள மறுத்தது அவர் வாழ்க்கையில் மிக்வும் சுவாரஸ்யமான அம்சம். எல்லையின்றிச் சிந்திக்க, பிறர் குண தோஷங்களை எடுத்துக் காட்ட, பிரச்னைகளை சர்ச்சை செய்ய, அவைகளைத் தீர்ப்பதற்கு யோசனை கூற யாவருக்கும் உரிமையுண்டு என்று வாதாடுகிறவர் என்கிற முறையில், அவரை ஒரு தாராள நோக்கமுள்ள ஜனநாயக வாதி என்று கூறலாம். தனி உடைமை, பொதுவுடைமை, சர்க்கார் ஏகபோக உரிமை யாவற்றையும் அவர் எதிர்த்து வந்ததால் அவரைச் சோஷலிஸ்ட் என்று கூறலாம்.

பொது விஷயங்களைப் பற்றி அவர் நிரம்பக் கட்டுரைகள் எழுதி யிருக்கிறார். சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லி யிருக்கிறார். கட்டுரைகளை விட அவர் நிரம்ப நவீனங்கள் எழுதி யிருக்கிறார். அவர் ஹாஸ்யச் சுவையுடன் எழுதக் கூடியவரா என்பதைப் பற்றி விவாதம் நடந்திருந்தாலும், அது பற்றித் திட்டமான முடிவு ஒன்றும் ஏற்பட வில்லை.

1948-ல் சில பாஸிஸ்டுக் காலிகளுடன் கைகலந்ததில் அவருக்குப் பலத்த காயம் ஏற்பட்டது. 1952-ல் சில காலம் ஆண்ட பொதுவுடைமை சர்வாதிகார ஆட்சியினரால் சிறைப்படுத்தப்பட்டு தனிக்காவலில் இருந்ததனல் அவருடைய உடல் நிலை இன்னும் மோசமாகி விட்டது. காலத்தை முன் கூட்டிச் சொல்பவன் என்கிற பெயர் வருவதற்குப் பதிலாக அவரை மக்கள் மறந்து விட்டனர். அவருடைய அவசியமான தேவைகளைப் பூர்த்தி செய்ய 1955-ல் அவருக்குப் பென்ஷன் அளிக்கப்பட்டது.

ரீஜண்ட் பார்க்குக் கருகில் ஒரு பாழடைந்த வீட்டில் அவர் குடியிருந்தார். ஒரு வளைந்த, ஆபாசமான உடை அணிந்த, பருமனை அவர் சில சமயம் பக்கத்துத் தோட்டங்களில் தள்ளாடிக்கொண்டு நடமாடுவதைப் பலர் பார்த்திருக்கலாம். அச் சமயங்களில் 'என்றைக்காவது ஒரு நாள் உண்மையிலேயே ஒரு நல்ல புஸ்தகத்தை எழுதி விடுகிறேன்" என்று அவர் முணுமுணுப்பதைப் பலர் கேட்டு இருக்கலாம். —ஹிந்துஸ்தான்

# புஷ்பமித்திரை

●

ஆர். ஆறுமுகம்

புஷ்பமித்திரை ஒரு மூலையில், நடுங்கியபடியே நின்றுகொண்டிருந்தாள். மகேந்திரன் அறைக்குள் வந்ததும், நாலாபக்கமும் ஒரு பார்வை பார்த்துவிட்டு, மஞ்சத்தில் போய் அமர்ந்தான். புஷ்பமித்திரை அவனையேதான் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தாள். "ஆஹா, என்ன கட்டுமஸ்தான தேகம்! கடைந்தெடுத்தது போன்ற அவயவங்கள். அகன்ற மார்பு. மாந்தளிரின் நிறம். கம்பீரப் பார்வை" என்று அவளையுமறியாமலே ஓர் எண்ணம் உதித்தது.

இவ்வளவு நேரமும் எதையோ குறித்து யோசனை செய்துகொண்டிருப்பவனைப் போலக் காணப்பட்ட மகேந்திரன், அறையின் நான்கு மூலைகளிலும் கவனித்தான். புஷ்பமித்திரை அவன் கண்களில் பட்டுவிட்டாள்! அவன் தன்னைக் கவனிக்கிறான் என்பது தெரிந்ததும், அவள் தன் தலையைக் கவிழ்த்துக்கொண்டாள். "பரவாயில்லையே! அவர்கள் இவளைப் பற்றி என்னிடம் சொன்னபோது இவ்வளவு அழகாயிருப்பாளா என்று நான் கூடச் சந்தேகப்பட்டேன். அவர்கள் சொன்னதற்கு மேலேதான் இருக்கிறாள்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டே புன்முறுவல் செய்து, பக்கத்தில் நின்ற பணிப் பெண்ணைத் திரும்பிப் பார்த்தான். அந்தப் பார்வையின் அர்த்தத்தை உணர்ந்துகொண்ட அவள், அவனை வணங்கிவிட்டு, அறைக் கதவை வெளிப் பக்கமாகச் சாத்திக்கொண்டு போய்விட்டாள்.

மகேந்திரன் தொண்டையைக் கனைத்தான். அந்தத் தொனியில் தன்னைக் கூப்பிடும் பாவனை இருப்பதையறிந்த புஷ்பமித்திரை அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவன் லேசாகத் தலையை அசைத்தான். நின்றுகொண்டிருந்த இடத்தை விட்டு மெதுவாக நகர்ந்து அவனருகில் வந்து நின்றாள். மஞ்சத்தில் அவனுடன் கூட உட்காராமல் நின்றுகொண்டேயிருந்தாள். அவன் அவளையே பார்த்தான். அவளோ தலையைக் குனிந்துகொண்டாள்.

"உட்காரு என்று சொல்ல வேண்டுமோ?"

"இல்லை அரசே, மன்னிக்க வேண்டும்."

"எதற்காக மன்னிப்பு?"

"நான் இன்று உங்கள் விருப்பத்திற்கு இணங்க முடியாதவளாயிருக்கிறேன்."

"இங்கே வரும் பெண்களெல்லாமே தாங்களே இஷ்டப்பட்டுத்தான் வருகிறார்கள் என்று நினைக்கிறாய்? இல்லை. என் இஷ்டத்திற்காகவேதான் வருகிறார்கள். அதுபோலே நீயும் ஒருத்தி..."

"என்னைப் பலவந்தப்படுத்தி உங்களுடைய ஆட்கள் கட்டிக்கொண்டு வந்தார்கள்."

"அது கிடக்கட்டும், நீ என்ன பதிவிரதை மாதிரி என்னிடம் பேசுகிறாயே! வேசி குலத்தில் பிறந்த உன்னை நாடி எத்தனை

மாபாதகங்களைப் புரிந்து மனம் அழிந்து போன மகேந்திரனைக் கேவலம் ஒரு தாசி புத்தர் பிரானின் அறவழிக்குத் திருப்பி விடுகிறாள். ஆனால், அதற்காக அவள் எவ்வளவு பெரிய தியாகத்தைச் செய்ய வேண்டி ஆகிவிடுகிறது!

பேர்கள் உன் வீட்டிற்கு வந்து போகிறார்களென்பது எனக்குத் தெரியாதா?'' என்று சற்றுக் கோபமாய்க் கேட்டான் இளவரசன்.

"நான் வேசிதான். இல்லையென்று சொல்லவில்லையே. அவர்களிடமெல்லாம் என் உடலைக் காட்டுவது பணம் பறிக்க. ஆனால், உங்களிடம் அப்படி நடந்துகொள்ள என் மனம் இசையவில்லையே.''

"நீ என்ன சொல்லுகிறாய்? சொல்வதைச் சரியாகச் சொல்லு. வீணாக என் நேரத்தை விரயம் செய்யாதே.

"முடியாது என்று பல தடவை சொல்லிவிட்டேன்."

அவனுடைய கண்கள் சிவந்தன. கைகளைப் பிசைந்து கொண்டான். தங்கக் கோப்பையிலிருந்த மது ரசத்தை எடுத்து ஒரே மூச்சில் பருகிவிட்டு அதை அலட்சியமாய் எறிந்தான். அந்த வேகத்தில் அவனுடைய கோபமும் வெளிப்பட்டது.

"மறுபடியும் கேட்கிறேன். நன்றாய் யோசித்துச் சொல். உன் அழகான தேகம் வீணாக மண்ணில் புதைந்து அழுக வேண்டாம். ஒரே ஒரு தடவை என்னோடு சேர்ந்து இருக்க உடன்பட்டுவிடு. அவ்வளவுதான். பின்பு உன்னைச் சுயேச்சையாக விட்டு விடுகிறேன். நீ கேட்பதையெல்லாம் தருகிறேன். மற்றவர்களைப் போல ஒரே பெண்ணை ஆயுள் வரை கட்டிக்கொண்டு இம்சைப் படுத்துபவன் நான் அல்ல. தினமும் ஒவ்வொரு இரவும், ஒரு புது மலரை முகர்பவன்! என்ன சொல்லுகிறாய்?''

"அரசே, நிறுத்துங்கள் உங்கள் பேச்சை. என் அழகான தேகத்திற்காக நீங்கள் இரக்கப்பட வேண்டாம். இது என்றைக்கேனும் ஒரு நாள் மண்ணுக்குப் போக வேண்டியதுதான். இன்றே போகட்டுமே!''

"வேதாந்தம் பேசாதே என்னிடம். அப்படிப் போகுமுன் என்ன நடக்கும் என்பதைத் தெரிந்து கொண்டாயா?''

"என்னைச் சித்திரவதை செய்வீர்கள். என் உயிரை அணு அணுவாகப் பிரிக்கக் கட்டளையிடுவீர்கள். அவ்வளவுதானே?''

"இல்லை. என் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொண்ட பின்புதான் உன் தலை பூமியில் உருளும்.''

"அதற்கு நான் இணங்கினால் தானே?''

"நீ இஷ்டப்பட்டாலும் படாவிட்டாலும், எனக்குத் தெரியும் அதைத் தீர்த்துக் கொள்ள!''

"அதில் நீங்கள் என்ன இன்பத்தைப் பெற முடியும்? இருவர் மனமும் ஒத்து இருக்கும் சமயத்தில் தோன்றும் ஆனந்தத்தில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட இருக்காதே! பிரதி தினமும் ஒரு புது மலரை முகர்கிறேன் என்று பெருமையாகச் சொல்லிக் கொள்ளும் உங்களுக்கு இந்த ரகசியம்கூடத் தெரியவில்லையே.'' என்று சொல்லிவிட்டு மறுபடியும் ஏளனமாகச் சிரித்தாள்.

மகேந்திரனுக்குக் கோபம் மீறிவிட்டது.

"என்னை யாரென்று நினைத்துக்கொண்டு இப்படியெல்லாம் பேசுகிறாய்? உன் வீட்டுக்கு வந்து போகிறார்களே, அந்தப் பிச்சைக்காரர்களில் ஒருவனாக மதித்து விட்டாயா....''

"இல்லை. நீங்கள் அரசர். இளவரசர். அசோகச் சக்கரவர்த்தியின் திருக் குமாரர். அவருக்குப் பின் இந்தச் சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆள்பவர். குடிகளின் குறைகளைத் தீர்த்து அவர்களுக்குத் தந்தை ஆகப்போகிறவர்..."

"போதும், இப்படி யெல்லாம் சொல்லி என்னை மறுபடியும் இகழத்தான் செய்கிறாய்...சரி. கடைசி முறையாகக் கேட்கிறேன். என்ன சொல்லுகிறாய்?"

"அரசே, முடியாது! கண்டிப்பாய் முடியாது!"

மகேந்திரன் மஞ்சத்தி லிருந்து ஒரு துள்ளுத் துள்ளி எழுந்தான். நின்றுகொண் டிருந்த புஷ்பமித்திரையைப் பந்தைப் போல அலட்சியமாகத் தூக்கி மஞ்சத்தில் பொத்தென்று போட்டான். அவள் ஒன்றுமே பேசவில்லை. அவனைத் தடுக்கத் தன் ஒரு விரலைக்கூட நீட்ட வில்லை; உணர்ச்சியற்ற மரக்கட்டை போலக் கிடந்தாள் மஞ்சத்தில். "இந்தக் கணநேர இன்பத்திற்காகத் தன் அந்தஸ்தை யெல்லாம் மறந்து இப்படி மிருகத்தனமாக நடந்துகொள்கிறானே! இவன் மனிதன்தானா?" என்று மனத்திற்குள்ளேயே அவனைச் சபித்தாள். அதைப்பற்றி அவனுக் கென்ன கவலை?

தன் ஆவலை ஒருவாறு தணித்துக் கொண்ட மகேந்திரன் மஞ்சத்தி லிருந்து அவளைக் கையைப் பிடித்து இழுத்து விட்டான். அவளும் ஒன்றும் பேசாமல் தன் ஆடைகளைச் சரிசெய்துகொண்டு அடுத்தாற்போல அவன் கொடுக்கும் தண்டனையை ஏற்றுக் கொள்ளத் தயாரா யிருந்தாள். மற்றொரு கிண்ணத்தி லிருந்த மதுரசத்தை எடுத்துப் பருகிவிட்டு, மறுபடியும் மஞ்சத்தில் வந்தமர்ந்து கடுமையாக அவளைப் பார்த்தான்.

"ஏன் உட்கார்ந்து விட்டீர்கள்? உங்கள் விருப்பம்தான் பூர்த்தியாகிவிட்டதே, அடுத்தபடியாக என்னைக் கொலை செய்துவிட வேண்டியதுதானே?"

"இல்லை. எனக்கென்னமோ இப்போது மனம் மாறிவிட்டது. உன்னைக் கொன்று என் கையை ரத்தக் கறையாக்கிக் கொள்ள இஷ்டமில்லை. போ, பிழைத்துப் போ."

"உம். இது ஓர் இன்பமா? சிற்றின்பத்தையும் சுவைத்துப் பருகத் தெரியாத நீங்கள் தினம் தினமும் மலர் மலராகத் தேன் குடிப்பதாகப் பெருமை கொண்டுவிட்டீர்கள்..." என்று அவள் சொல்லிக்கொண் டிருக்கும்போதே, அசதியாலும், மயக்கத்தாலும் அவன் அப்படியே மஞ்சத்தில் சாய்ந்துவிட்டான். அவளும் அவனை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, கதவைத் திறந்துகொண்டு போய்விட்டாள். வெளியே தயாராய்க் காத்துக்கொண் டிருந்த அவளுடைய ஆட்கள், அவளை இரகசிய வழி மூலமாக அழைத்துச் சென்று வீட்டில் சேர்த்தார்கள்.

மகேந்திரனை அசோகன் அழைக்கிறான் என்று ஒரு சேவகன் வந்து மகேந்திரனிடம் சொன்னான். தந்தை எங்கே இருக்கிறார் என்று இளவரசன் கேட்டான். அந்தரங்க மண்டபத்தில் தனியே இருப்பதாகவும், சற்று நேரத்திற்கு முன்பு அந்த ஊர்த் தாசி புஷ்பமித்திரை என்பவள் வந்து அரசரோடு பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போனாள் என்பதாகவும் வீரன்

பதில் அளித்தான். அதைக் கேட்டதும், மகேந்திரனுக்குத் திகீர் என்றது. என்ன செய்வதென்று தெரியாமல் பலத்த யோசனை செய்துகொண்டே குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். அவளை உயிரோடு அனுப்பியதே பெரிய பிசகாய் விட்டது. ஆனால், அந்த அழகியைக் கொல்லவும் அந்தச் சமயத்தில் அவனுக்குக் கை நடுங்கியது. இல்லாவிட்டால் மஞ்சத்தில் அவள் படுத்திருந்தபோதே கழுத்தை நெரித்திருப்பான். தப்பித்துக் கொண்டாள்!

சற்று நேரத்தில், மகேந்திரனும் அசோகன் முன் போய் நின்றான். அசோகன் அவனை மேலும் கீழும் பார்த்தான். நெற்றியில் ஜவ்வாதுப் பொட்டு. உடம்பெல்லாம் கமகம வென்று கமழும் சந்தனப் பூச்சு. வெற்றிலை மென்று சிவந்திருந்த உதடுகள். அரையில் மெல்லிய வெண்பட்டு. தோளிலிருந்து பாதம் வரை தொங்கிய நீண்ட அங்கவஸ்திரம். மண அறைக்கு வந்திருக்கும் மண மகனைப் போலத் தோன்றினான் மகேந்திரன். தன் தந்தை தன்னைப் பார்த்த பார்வை அவனுக்கு ஒரு பயத்தை உண்டு பண்ணியது.

"மகேந்திரா! நீ எனக்கு மைந்தனாகத் தப்பிப் பிறந்துவிட்டாய். இந்திர லோகத்தில் வசிக்க வேண்டியவன் நீ!" என்றான் கிண்டலாக அசோகன்.

இளவரசன் பதில் பேசவில்லை.

"நீ செய்யும் காரியங்களையெல்லாம் நான் தினமும் கவனித்துக்கொண்டுதான் வருகிறேன். உன்னால் கொலையுண்டு மண்ணுக்குள் புதைந்தவர்கள் எத்தனை பேர் என்பது எனக்குத் தெரியாமலில்லை. எத்தனைக் குடும்பங்களை நீ அவதிப்படுத்தியிருக்கிறாய் என்பதும் பொது ஜனங்களுக்கு நன்றாய்த் தெரிந்துவிட்டது. நானும் உனக்குத் தன்னாலேயே புத்தி வரும் என்று இதுவரை பேசாமலிருந்துவிட்டேன். இப்போதோ, உன்னுடைய திருவிளையாடல்கள் அளவுக்கு மீறிப் போய்விட்டன. இனியும் நான் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தால், என்னை நம்பியிருக்கும் என் குடிகளுக்கு நான் நீதி தவறியவன் ஆவேன்..." என்று அசோகன் சொல்லிக்கொண்டு வரும்போதே மகேந்திரன் குறுக்கிட்டான்.

"நீங்கள் சொல்வதெல்லாம் சரி.என்றால் பலர் மாண்டதையும், குடும்பங்கள் சீரழிந்ததையும் பற்றிப் பிரமாதமாகச் சொல்லுகிறீர்கள். இதுவரை நீங்கள் எத்தனை யுத்தங்களை நடத்தி வெற்றி மாலை சூடியிருக்கிறீர்கள்? அவைகளில் எல்லாம் எத்தனை ஆயிரம் பேர் மடிந்தார்கள்? அவர்களுடைய குடும்பமெல்லாம் இன்று எப்படியிருக்கின்றன? அவைகளைக் காட்டிலுமா அதிகமான தீங்கை நான் செய்துவிட்டேன்?"

"யுத்தத்தையும் உன்னுடைய காரியத்தையும் ஒப்பிட்டா பேசுகிறாய்? யுத்தம் ஒரு தேசத்தின் நன்மையை உத்தேசித்துச் செய்வது. அரசர்களின் கடமை அது. இதுவரை நம் ஜனங்கள் அதைப் பற்றி என்னைக் குறை கூறியிருக்கிறார்களா? ஆனால், இன்று உன்னைப் பற்றி அவர்கள் என்ன நினைக்கிறார்கள்? சமயம் நேர்ந்தால், உன் தலையைக் கொண்டு போகவும் அவர்கள் தயாராயிருக்கிறார்கள். கேவலமான ஒரு சிறு இச்சைக்காக உயிரை இழந்து இந்த மௌரிய அரச பரம்பரைக்கே ஒரு பழிச்

சொல்லை ஏற்படுத்துவதுதான் உன் நோக்கமா? இதுவரை நீ செய்ததையெல்லாம் மன்னித்து விடுகிறேன். இனியாவது ஒழுங்காய் நடந்துகொள், போ" என்று கோபமாய்க் கூறினன் அசோகன்.

மகேந்திரன் தயங்கி நின்றான். என்ன காரணம் என்று கேட்கும் தோரணையில் அசோகன் அவனை ஏறிட்டுப் பார்த்தான். ஏதோ சொல்ல யத்தனித்த மகேந்திரன் மறுபடியும் தயங்கிவிட்டு, அவனை வணங்கிப் போய் விட்டான். அவன் நடையிலிருந்தே அவன் தன் குற்றத்தை உணரவில்லையென்பதைத் தெரிந்துகொண்டான் அசோகன்.

அன்றிரவு, மகேந்திரன் இருப்பிடத்தைச் சுற்றிலும், அவனுக்குத் தெரியாமல், பல ஒற்றர்களை நிறுத்தி வைத்திருந்தான் சக்கரவர்த்தி. நடு நிசி. புஷ்பமித்திரையை இரண்டு காவலாளிகள் இழுத்துக் கொண்டு மகேந்திரன் தங்கியிருந்த கூடத்துக்குள் நுழைந்தார்கள். அதை ஒற்றர்கள் மூலம் அறிந்த அசோகன் உடனே அங்கே விரைந்து வந்து கதவை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். புஷ்பமித்திரை ஒரு தூணில் கட்டப்பட்டிருந்தாள். அவளைச் சவுக்கினல் 'வெளுக்க' ஒரு முரடன் தயாராயிருந்தான்.

"நேற்று என் தந்தையிடம் போய் என்னைப் பற்றிப் புகார் செய்ததின் பலன் இது..." என்று இரைந்துகொண்டிருந்தான் மகேந்திரன்.

அசோகனைக் கண்டதும் தன் வசை மொழிகளை நிறுத்திக் கொண்டான். சவுக்கை வைத்துக்கொண்டிருந்தவன் ஓர் ஓரமாய் ஒதுங்கிவிட்டான். புஷ்பமித்திரையின் முகத்தில் ஒரு வெற்றிக் குறி தாண்டவமாடியது. இளவரசன் தன் தந்தையின் கோபத்திற்குப் பயந்து, அவர் வாயிலிருந்து என்ன வருமோவென்று கவனித்துக் கொண்டிருந்தான்.

சக்கரவர்த்தி தன் குமாரனை ஒரு கணம் கோபமாய்ப் பார்த்துவிட்டு, "உன்னைத் தண்டித்தால் நம் முன்னோர்களின் கோபத்திற்கு நான் ஆளாகவேண்டுமேயென்று இதுகாறும் தயங்கிக் கொண்டிருந்தேன். ஆனல், இப்போதோ, உன்னைத் தடுக்காவிட்டால், என் பிரஜைகளின் சாபத்திற்கு ஆளாகவேண்டுமேயென்று அஞ்சுகிறேன். இனி உன்னை மன்னிப்பதிலும் பயனில்லை. இந்த வீரர்கள் உன்னைப் பத்திரமான இடத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள். போ, அவர்களோடு" என்று வெளியே கையைக் காட்டினன்.

மறுவார்த்தை பேசாமல் மகேந்திரன் வீரர்கள் முன் நடக்க, சக்கரவர்த்தி ஏற்கெனவே சொல்லியிருந்த அறைக்குள் அவர்கள் அவனைக் கொண்டு போய் விட்டுக் கதவைப் பூட்டினர்கள்.

அசோகன் புஷ்பமித்திரை பக்கம் திரும்பி, "பெண்ணே, என் குமாரனுக்காக நான் உன்னிடம்......" என்று ஆரம்பித்தான்.

"சக்கரவர்த்தி! அப்படி ஒன்றும் சொல்லிவிடாதீர்கள். நீங்கள் எங்கே, நான் எங்கே? என் குலத்தொழிலும் தாசித்தொழில் தான். ஆனல், இளவரசர் செய்யும் அக்கிரமங்கள் அதிகரித்துக் கொண்டு போனபடியால், அவைகளை நிவர்த்தி செய்ய என் உயி

ரைப் பணயம் வைத்தேன். நீங்கள் இரண்டையும் காப்பாற்றி விட்டீர்கள்" என்று தாழ்மையாகத் தெரிவித்தாள் தாசி.

சிறையில் மகேந்திரனுக்கு எல்லா வசதிகளும்—பெண்களைத் தவிர—இருந்தன. மகேந்திரனே ஆகாரம்கூட உட்கொள்ளாமல் மௌனமா யிருந்தான். யார் வந்து எது கேட்டாலும் பதில் பேசுவ தில்லை. மூன்று நாட்கள் இப்படிக் கழிந்தன. அசோகன் கவலை யடைய ஆரம்பித்தான். வைத்தியர்களை விட்டுத் தன் மைந்தனுடைய உடல் நிலையைக் கவனிக்கக் கட்டளையிட்டான். அவர்களும் போய் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். மகேந்திரன் அசையவில்லை. "இப்படி இருந்தால், இன்னு மிரண்டு நாட்களில் உயிருக்கே ஆபத்து வரும்" என்று எச்சரித்தார்கள் வைத்தியர்கள். அசோகனுக்கு என்ன செய்வதென்று தோன்ற வில்லை. தன் மனைவியையும் அனுப்பி அவனைச் சமாதானம் செய்யச் சொன்னான்; பலிக்க வில்லை.

அசோகனுக்குப் பளிச்சென ஒரு யோசனை உதித்தது. அவனுடைய புதல்வி சங்கமித்திரா, மகேந்திரனின் தங்கை, அந்தச் சமயம் பௌத்த சங்கத்தில் சேர்ந்து புத்த பிரானின் கொள்கைகளைப் பயின்றுகொண் டிருந்தாள். அந்தச் சங்கத்தின் ஆச்ரமம் நகருக்கு வெளியே தானிருந்தது. அவளுக்குத் தன் தமையன் சிறைப்பட்ட விஷயமெல்லாம் தெரியாது அவள் பேரில்தான் மகேந்திரனுக்கு அளவிலாத அன்பு. ஒரு வேளை அவள் வந்து ஆறுதல் கூறிச் சமாதானப்படுத்தலாம் என்று எண்ணி அசோகன் அவளுக்குப் பல்லக்கை அனுப்பி உடனே வரவழைத்தான்.

சங்கமித்திரா, அசோகனைக் கண்டு பேசி, விஷயத்தைத் தெரிந்து கொண்டு நேரே சிறைக்கு ஓடினாள். அங்கே அவள் கண்ட கோரக் காட்சி!—மகேந்திரனை அவள் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. உயிர்தான் அவன் உடலில் ஊசலாடிக்கொண் டிருந்தது. 'கோ' வென வாய்விட்டுக் கதறிவிட்டாள். சத்தம் கேட்டு மெதுவாய்க் கண் விழித்துப் பார்த்தான் இளவரசன். தன் தங்கை! அவள் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். ஆனால், அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வரவில்லை. சப்த நாடியும் ஒடுங்கிப் போய்விட்டன. கண்களிலிருந்து கண்ணீர் கூட வரவில்லை. அதுவும் வற்றிவிட்டது. சங்கமித்திரா தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "அண்ணா, தந்தை எல்லாவற்றையும் கூறினார். உங்களுக்கு மனச்சாந்தி அளிக்க வல்லது புத்த சங்கம் ஒன்றுதான். உடம்பைத் தேற்றிக்கொண்டு அந்த ஆச்ரமத்தில் வந்து சில நாள் தங்குங்கள். புத்த பிரானின் உபந்யாசங்களைக் கேட்டுக் கொண்டு, பின் நாம் இருவரும் இலங்கைக்குச் சென்று, அந்தப் புனித வள்ளலின் சமயத்தை அந்தத் தீவில் பரப்புவோம்" என்று ஆறுதல் கூறினாள். மகேந்திரனும் அதற்கு உடன்பட்டுத் தலையை அசைத்தான். அருகில் நின்ற தாதியின் கையிலிருந்த தங்கக் கிண்ணத்தை வாங்கி, அதிலிருந்த பழரஸத்தை, அண்ணன் வாயில், தங்கை ஊற்றினாள். அவனும் அன்போடு பருகினான்.



புத்தக  உலகம்

**நாட்டியக்காரி (கதைகள்):** ஆசிரியர்: 'வல்லிக்கண்ணன்' கிரௌன் 1×8. 100 பக்கம். விலை ரூ 1—4—0. வெளியிட்டோர்: கவிக் குயில் நிலையம், கோட்டாறு, தென் திருவிதாங்கூர்.

"நாட்டியக்காரி" முதலிய பன்னிரண்டு கதைகள் இதில் அடங்கியுள்ளன. இதன் ஆசிரியர் 'வல்லிக் கண்ணன்' மறுமலர்ச்சி யுகத்தின் தலை சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் என்பதோடு, ஒரு உயர்ந்த சிந்தனைச் சிற்பியும் கூட. வாழ்க்கையை வித விதமான கோணங்களிலிருந்து ஆராய்ந்து, கதைகளாய்ச் சித்தரிப்பதில் அவர் வல்லவர்.

வெறும் 'மினுக்கை'க் கண்டு மயங்குவதைக் கலை ரசனை என்று நினைக்கும் ஏமாற்றத்தை அம்பலப் படுத்தும் "நாட்டியக்காரி" ஒரு அற்புதச் சிருஷ்டி. ஆண் பெண் வாழ்வில் முளைக்கும் சிக்கல்களை ஆராயும் "சிருஷ்டிக் கோளாறு," "வாணியின் புதிர்" என்ற இரு கதைகளும், 'அழகுக் கோஷா'வின் 'அந்தப்புர லீலை'யைச் சித்தரிக்கும் 'நூர்ஜஹா'னும், 'மனம் கல்லான கடவுளின பிரதிநிதி'யான அர்ச்சகர் காசுக்குக் கடவுளை விற்கும் கொடுமையை வருணிக்கும் 'காணிக்கை'யும் சிறந்த கதைகள். இப்படியே இதரக் கதைகளும் வாழ்க்கையின் உண்மை விமரிசனமாகத் திகழ்கின்றன. நல்ல முறையில் அச்சிட்டு வெளியிட் டிருக்கிறார்கள்.

**மதிப்புரைக்கு இரண்டு இரண்டு புத்தகங்கள் அனுப்ப வேண்டும்**

**காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு கம்யூனிஸ்ட் பதில் (முதல் இரண்டு பாகங்கள்):** ஆசிரியர்: பி. ஸி. ஜோஷி. வெளியிட்டோர்: ஜனசக்தி பிரசுராலயம், 1/6, டேவிட்ஸன் தெரு, ஜி. டி. சென்னை; கிரௌன் 1×8. இரண்டும் 292 பக்கங்கள். ஒவ்வொன்றும் விலை ரூ. 1-8-0.

நாளுக்கு நாள் வளர்ந்து வரும் கம்யூனிஸ்டு எதிர்ப்பு மனோபாவத்தைச் சாந்தப்படுத்தும் பாவனையில் இப் புத்தகம் வெளியிடப்பட் டிருக்கிறது. 1942-லும் அதற்குப் பின்னும் தாங்கள் செய்த பல காரியங்களுக்கு இதில் சமாதானம் கூறி யிருக்கிறார்கள். சமாதானம் மிக்க நேர்மையுடன் கூறப்பட் டிருந்தாலும், முன் பின் முரணான கூற்றுக்கள் அனேகம் தலை காட்டுவதால், முழு வாதத்தையும் அப்படியே ஏற்றுக் கொள்வதற் கில்லை.

**வரப்பெற்றோம்:** உழவர் யாதாஸ்து: விலை 1 அணா. (2) சமஸ்தானத்திலிருந்தும் வெளியேறு: இஸ்மத் பாஷா எழுதியது. விலை 2 அணா. (3) பிரிட்டிஷ் தூது கோஷ்டி தருவது என்ன?—விலை 2 அணா (4) கம்யூனிஸ்ட் கட்சியும் விவசாயமும்: ஆசிரியர்: பி. ஸ்ரீனிவாஸ ராவ். விலை 3 அணா. (5) எல்லோருக்கும் வேலை: பி. டி. ரணதிவே ஆங்கிலத்தில் எழுதியது. மொழி பெயர்த்தவர்: ஸி. எஸ். சுப்ரமண்யம். விலை 4 அணா. (6) சுதந்திரத்திற்காக இறுதிப் போராட்டம்: ஆசிரியர்: பி. ஸி. ஜோஷி. விலை ரூ. 1-4-0. (7) பகத் சிங்கும அவரது தோழர்களும்: ஏ. கே. கோஷ் எழுதியது. மொழி பெயர்ப்பு: R. H. நாதன். விலை 8 அணா. மேற்கண்ட ஏழு புத்தகங்களையும் வெளியிட்டோர்: ஜனசக்தி பிரசுராலயம், சென்னை.

(8) **உண்மை விளக்கம்:** ஆசிரியர்: திருவதிகை மனவாசகங்கடந்தார். (9) **நடராச சதகம்:** ஆசிரியர்: ஸ்ரீமத் சிதம்பரநாத முனிவர். (10) **மிருகேந்திரம்:** ஸ்ரீமத் வெள்ளியம்பல வாணத் தம்பிரான் சுவாமிகள். மூன்றிற்கும் விலை தெரிய வில்லை. தருமபுர ஆதீனத்தின் வெளியீடுகள் இவை.

(11) இதோ ஜனுப் ஜின்னுஹ்: ஆசிரியர்: ஏ. ஏ. ரவூப். விலை 4 அணு. 'சங்கு' பிரசுரம், காரைக்கால்.

(12) சுடர் (மாத வெளியீடு:) பதிப்பாசிரியர்: 'இனியன்'. வெளியிடுவோர்: சுடர் நிலையம், புதுவை.

(13) மறு மலர்ச்சி (மாத வெளியீடு): ஆசிரியர்கள்: ஏ. எஸ். முருகானந்தன், டி. எஸ். வரதராஜன். வெளியிடுவோர்: மறுமலர்ச்சி, யாழ்ப்பாணம், இலங்கை. விலை 5 அணு.

(14) அணிகலம் (விசேஷ இதழ்): ஆசிரியர்: ல. கதிரேசன் செட்டியார். வெளியிடுவோர்: அணிகலம், புதுக்கோட்டை. விலை 4 அணு.

(15) தமிழரும் பிரிட்டிஷ் திட்டமும்: ஆசிரியர்: ம. பொ. சிவஞான கிராமணியார். உரிமையாளர்: தென்றல் காரியாலயம், தியாகராய நகர், சென்னை. விலை 6 அணு.

16. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் பாமணிகள்: வெளியிட்டோர்: 70-வது ஆண்டு விழாக் கமிட்டியார், நாகர் கோவில். விலை தெரிய வில்லை.

ஆங்கிலம்

17. Strike! — பதிப்பாசிரியர்: ஜி. அதிகாரி. விலை 6 அணு 18. Towards a People's Navy: ஆசிரியர்: பி. ஸி. ஜோஷி. விலை தெரிய வில்லை. 19. Iran at the Cross Roads: ஆசிரியர்: மோஹன் குமாரமங்கலம். விலை ரூ. 1. 20. The Way out of China's Civil War: ஆசிரியர்: மாட்ஸே டுங். விலை ரூ. 1. 21. Notes on the Bengal Renaissance: ஆசிரியர்: அமித் ஸென். விலை ரூ. 1. 22. Vishala Andhra: ஆசிரியர்: பி. சுந்தரய்யா. விலை ரூ. 1. மேற் கண்ட ஐந்து புத்தகங்களையும் வெளியிட்டோர்: பீபிள்ஸ் பப்ளிஷிங் ஹௌவுஸ், ஸாந்தர்ஸ்ட் ரோட், பம்பாய்.



## ஐக்கிய இந்தியா

எப்படி அல்ஸ்ட்டர் மாகாணம் சுதந்தர அயர்லாந்தோடு சேர்ந்து விடுமோ அம் மாதிரியே, பிளவுபட்ட இந்தியாவும் மீண்டும் ஐக்கிய மடைவது திண்ணம்.

—பெர்னர்டு ஷா

## இரகசியம் என்ன ?

ஹாலிவுட்டிற்கு ஒரு சமயம் ருஷ்ய டைரக்டர் ஒருவர் போயிருந்தார்.

ஹாலிவுட் டைரக்டர், அவருக்கு அனேக நட்சத்திர நடிகைகளை அறிமுகம் செய்து வைத்தார். அந்த நட்சத்திரங்களைப் பற்றி ஏதோ பேச்சு வந்தபோது, ஹாலிவுட் டைரக்டர், "எல்லோரும் கட்டழகிகள் தான், ஆனல், அவர்கள் செய்துகொள்ளும் கல்யாணங்கள் தான் நிலையா யிருப்ப தில்லை" என்ருர்.

அதற்கு ருஷ்ய டைரக்டர் உடனே, "எங்கள் நாட்டில் சினிமா நட்சத்திரங்கள் அதிகம் விவாக ரத்துச் செய்துகொள்வ தில்லை. தங்கள் முகங்களை அவர்கள் கழுவிக்கொண்டு விட்டால் அவர்கள் எல்லோர் முகமும் ஒரே மாதிரி இருக்கும். அதுதான் காரணம்" என்று கூறினர்.

## பிரசவ காலத்தில்

பிரசவ வேதனையால் கஷ்டப்படும்போது, நீக்ரோப் பெண்கள் பிரார்த்திக்கிருர்கள்; இத்தாலியப் பெண்கள் திட்டுகிருர்கள்; யூதப் பெண்கள் தங்கள் தாய்க்குச் சொல்லி யனுப்புகிருர்கள். நீக்ரோவரைத் தவிர்த்து வெகு சிலரே இரைந்து பிரார்த்திக்கிருர்கள். யாரும் தகப்பனுரைக் கூப்பிடுவ தில்லை; கணவனைக் கூப்பிடுகிறவர்கள் கிடையவே கிடையாது.

—ஒரு வைத்திய அறிக்கை



40




எப்பொழுதுமே
வைரம், தங்க நகை
உலகில் உண்மைக்கும்
— உயர்வுக்கும் —
பெயர் பெற்ற இடம்

பி. ஏ. ராஜு செட்டியார் & பிரதர்

*வைரம், தங்க நகை வியாபாரிகள்*

ஸ்வர்ணமாளிகை :: கோயமுத்தூர்

*தந்தி: "ராஜா"* போன்: **218-A**

# நண்பர்களுக்கு முதல்தரமானது



எந்த சமயமானுலும் சரி, டீக்கு முதன்மை ஸ்தானம் நிச்சயம். இரண்டு மூன்று பழைய நண்பர்கள் ஒன்று சேர்ந்தாலும் சரி, பெரிய கூட்டமானுலும் சரி எல்லோருக்கும் உற்சாகத்தை அளிக்கவல்லது டீ.

எல்லா விஷயங்களிலும் உள்ளதுபோலவே, டீ தயாரிப்பதிலும் சரியான, தப்பான வழிகளுண்டு. விருந்தினர் விரும்புவது மிகச் சிறந்த பொருள்கள் தான். ஆகையால் விருந்தளிப்பவர் நல்ல டீ தயாரிக்கும் முறைகளையே எப்பொழுதும் பின் பற்றுவார்.

## நல்ல டீ தயாரிக்கும் முறை

1. கெட்டிலில் டீ காய்ச்சக்கூடாது. டீ பாத்திரத்தை உபயோகியுங்கள்.

2. உலர்ந்த டீயை பாத்திரத்தில் போடும்போது பாத்திரம் ஈரமில்லாமல் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நறுமணமுள்ள கஷாயம் கிடைக்கும்.

3. கப்புக்கு ஒரு டீ ஸ்பூன் விதமும், பாத்திரத்துக்காக ஒரு டீ ஸ்பூனும் டீ போடவும்.

4. புதிதாக காய்ச்சிய நீரையே உபயோகிக்கவும்; ஒருதரம் காய்ச்சிய நீரையோ, அதிகமாகவோ அல்லது குறைவாகவோ காய்ச்சப்பட்ட நீரையோ ஒருபோதும் உபயோகிக்காதீர்கள். தள தளவென்று குமிழி யிட்டு கொதிக்கும் நீர்தான் சரியாக காய்ச்சின நீர்.

5. கஷாயம் இறங்க குறைந்தது 5 நிமிஷ கால நேரம்வேண்டும்.

6. பாத்திரத்தில் இருக்கையிலேயே பால் சர்க்கரை சேர்க்காதீர்கள். கப்புகளில் விட்ட பிறகு சேர்க்கவும்.



எந்தநேரமும்
டீ
டீ அருந்தும்நேரம்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது

IK-250-TAI


நிர்வாக ஆசிரியர்: வை. கோவிந்தன் ஆசிரியர்: சுப. நாராயணன்

Printed and Published by Vai. Govindan at the Shakti Press Ltd., (Shanti Press) 115 - E, Mowbrays Road, Royapettah, Madras